



ஸ்ரீமதே நாராயணாய நம:

# விசிஷ்டாத்வைத

## பரத்வ நிர்ணயச்சிந்து.

முதல்பாகம்—இரண்டாம்பாகம்.

இஃது

மலையாண்டிபட்டணம்

இருபத்திநாலுமனை தேசாதிபதிகளின் வம்சத்தாரும்

இராமசாமிசெட்டியாரவர்களின் குமாரரும்

ஸ்ரீமான் கோடி கன்னிகாதானம்

திருவேங்கிட தாத்தாசாரிய

சுவாமிகளின் திருவடிசம்பந்தமாகிய

R. அவணாண்டிசெட்டியாரென்கிற

ஸ்ரீசைலதேசிக தாசரவர்களாலருளிச்செய்ததை

ஷை நூலாசிரியரவர்களால்

பொள்ளாச்சி

B. S. இராமலிங்க செட்டியார் அவர்களது

கோபால விலாசம் அச்சுயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீ பராங்குசர் திருவவதார வருஷம் 5024.

1922 ஸு ஏப்பிரல் மீ

First Edititon.



காப்பிகள் 500 —— விலை ரூ. 1—4—0

# ரிஜிஸ்டர் அறிவிப்பு.

இதனால் சகலமானபேர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில்

விசிஸ்டாத்வைத பரத்வ நிர்ணயசிந்து என்ற புஸ்தகத்தை அடியில் கையொப்பமிட்ட என்னால் இயற்றி என்பேரால் காப்பிரைட் ரிஜிஸ்டர் செய்து அச்சிட்டிருப்பதால் ஷை புஸ்தகத்தையாவது அதன் ஓர்பாகத்தையாவது என்னுடைய அனுமதி அன்னியில் எவராவது அச்சிடுவார்களாகில் கவர்மெண்டு காப்பிரைட் ஆக்கட்டுப்படி என்னால் கோரப்படும் சகல நஷ்டத்திற்கும் உட்படுவார்களென்பதை இதனால் தெரிவிக்கலானேன்.

இப்படிக்கு

**R. அவனாண்டி செட்டியார் என்கிற**

ஸ்ரீசைலதேசிகதாசன், மலைபாண்டிபட்டணம்

பொள்ளாச்சித்தாலூகா

கோயமுத்தூர் ஜில்லா

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## விசிஷ்டாத்வைத பரத்வ நிர்ணயச்சிந்தின் முதல்பாகம்

# பிரகரணங்களின் அட்டவணை.







    

ஸ்ரீமத் வரவர முநயே நம



## சிறப்புப்பாயிர தனியன்கள்

இஃது

இலட்சுமணபக்கன்பாளையம் லோகல்போர்டு ஸ்கூல் எட்மாஸ்டரும் ஸ்ரீமத் ராமாயண தாரக கலிப்பா நூலாசிரியருமான ஸ்ரீமான் ர. வெ. கிருஷ்ணசாமி ராஜு அவர்களால் இயற்றிய அறுசீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

பரவத்துநிர்ணயத்தைப் பகுத்துணரார்க் ககமகிழ்வுபாவனாலம்
வரமெத்தப் படைத்திகப ரானந்த சுகமடைந்து மவுனமூர்ந்து
நரகத்தும் சுவர்க்காதிபதனீங்கி நாதனுரு வோங்கநேமிக் (1)
கரம்வைத்தானுயர்பதத்திற் கலந்திடவே யதனுண்மைகண்டுதேற

மறைகளுபனிடத மிதிகாசமுதல் மந்திரமும் புராணமெல்லாம்
அறைதலதன் மர்மமுணர்ந் தகண்டபரி பூரணமாமாதிதன்பால்
கறையிலா வானந்த மடைந்திட வதனினுதிகடை கணக்கிட்டாழ்
ந்த (2)
புரையில்வேதாகமங்களறை பொருளினுளவரியப் புகுந்துநோக்கி

வாதிஷ்டம் நவநீதம் வகுத்திடு னுண்பொருளார்த்தம் வருவித்
தின்னுஞ்
சோதித்த நம்மாழ்வார் துலங்குமுதல் மூவர்களும் மழிசைமங்கை
போதித்த பாசுரத்தி னமிர்தமெனும் பொருளுண்டு புனிதரான
கோதித்த திருநாவரப்பரர் மாணிக்கருரை கூர்ந்து தேர்ந்து (3)

ஒன்றாக்கி யந்தத்தி னுருதியைக்கொண் டோங்காரத் தொடுக்கந்
தன்னை
குன்றாக்கி யகாரமொடு வுகார மகாரார்த்தத்தி னார்ந்தகோனை
நன்றாக்கியரியாதி யெனவுருதிநாட்டி நவையோட்டி நாட்டோர்க்
கின்றாக்கிவிசிட்டத்துவிதபரத்வ நிர்ணயச்சிந்திசைத்திட்டானை (4

இத்தகையபெருந்தகையாளரென்னினீரெட்டோடெட்டியோர்க்கு
முத்தனைய ராமசாமிப்பெரியோ னருந்தவத்தால் முளைத்தடாலன்
வித்தனைய புரிகளுக்கே மலையாண்டி நகருறைவோன் மேன்மைக்
கோயில்
வைத்தனைய யவனாண்டி சைலதேசிக தாசனாகும்மாதோ. (1)



இஃது பாலக்காடு பிரபல வித்வான்
ஸ்ரீமான் சி. நடேசம்பிள்ளையவர்களியற்றிய
பன்னிருசீர் கழிநெடி லாசிரியவிருத்தம்.

கன்னலொடு சென்னல்மிகு பண்ணையிற் றெங்குமா
கதலி மாதுளை பலாவும்
கதித்துவரு நதியாழி மிதத்துநன் னீரினாற்
கவின்கொண்டு சூழவோங்கும்

துன்னுமாமலையாண்டி யென்னுனற் புவிவளர்ச்
சுமுகனும் ராமசாமித்
தூய்தவப்புத்திரன் மாயன்மால்பதமலர்ச்
சூட்டுதொடை சைலதாசன்

சொன்னயப் பாவலன் பண்விசிஸ்ட்டாத்துவித
தொல்பரத்துவ நிர்ணயம்
சொற்றனூற் கண்ணுற்ற யான்மகிழ்ந் துரைப்பதினி
தூய்மறைப்பொருள் யாவையும்.

இன்னவிற் பஞ்சராத்திர வசன பூஷணத்
தியற்கையாவையுமுணருவோர்
கீதெனச்சிந்துவிசை யோதினன் புவிமீது
யினிதெனவு வாழ்கமாதோ (6)



இதுவுமது எண்சீர்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அந்தமிலாக் கடவுள்வாழ்க் கதிமுதலாய்க் கற்கிவரை
யடைவிற் றனே
விந்தைமலர்த் தொடையலென யுலகருக்குத் தெளிவாக
விளங்க வைத்து
சிந்தைசெயப்பிரகாண மறுனன்கதாக லஞ்செய்தான் ராமச்
சந்திரண யுளத்தமைத்த தேசிகனும் சைலஸ்ரீ தாசன்
மாதோ (7)

இஃது
உடுமலைப்பேட்டை தாலூகா வாழவாடியிலிருக்கும்
திருமாலைகட்டும்
ஸ்ரீமான் வெங்கிடசாமி அய்யரவர்களியற்றிய

அறுசீர் கழிநெடி லாசிரிய விருத்தம்

சீர்படைத்த மலையாண்டி திகழ்பதியில் வாழ்ராம சாமிசெம்மல்
கார்படைத்த திருமேனிக்கண்ணனையே நிதந்துதிசெய் கவியின் வல்லான்
தார்படைத்த யவனாண்டி யெனுஞ்சைலதாசனுமித் தரணியோர்க்
கார்படைத்தாரின் னூற்போ லறிவார்க்கிங்ககில மீதே (8)



இதுவுமது எண்சீர்கழிநெடிலாசிரிய விருத்தம்

செய்யமறை யுபநிடத மிதிகாசத்தாற்
சிறந்தபல புராணமொடு பஞ்சராத்ர
மய்யமிலா நூற்களெல்லா மறையுந்தேவன்
அச்சுதனே யவனன்றி யில்லை வேறு

துய்யவுலகோர்களுய்ய மூவெட்டாகத்
தொகுத்தபிர கரணமிதைச் சுவைப்போரான
மெய்யடியார்க் கின்னமிர்த மாகுமென்ன
விசிட்டமெனு மத்வைதம் விளம்பிட்டானே (9)



இஃது தில்லைச்சிதம்பரம் மேலவீதி
ஸ்ரீமான் திருநாராயணபிள்ளையவர்களின்
உபய வேதாந்த பாடசாலை உபாத்தியாயர்
ஸ்ரீலஸ்ரீ ஸ்ரீனிவாச வரதாசார்ய சுவாமிகளியற்றிய

அறுசீர் கழிநெடிலாசிரியம்

தேவராய் மூவராய்த் தெளியாத பொளியுருவாய் சிறந்தவண்டத்
தாவராய் பிரளயத்தி லகட்டடக்கி வெளிநாடியாகச்செய்யும்
பாவனையன்னாரணனென் றுலகருக்குப் பகுத்துச்சிந்தாய்
பாவலனும் ஸ்ரீசைல தாசனிதைப்பகர்ந்தான் மாமேதா. (10)

இஃது

உடுமலைப்பேட்டை ஸ்ரீமான் திருமூர்த்திக்கவிராஜ

ஞானபண்டிதர் குமாரர்

கோட்டூர் ஸ்ரீமான் தி. இரங்கசாமிக்கவிராயரவர்களியற்றிய

இரட்டையடி யாசிரியப்பா

சீர்பெற்ற லங்கையெனுமூருற்றவசுரன்
சிரம்துணிய வேவளைத்த
சிலையன் பெருத்தபாலலையன் மலர்ப்பதஞ்
தியானமதுவே செயுந்நல்

ஏர்பெற்றிலங்குமலை யாண்டி நகரினியவன்
ஏற்றனுலாறுமனையின்
எங்கட்டதிசை புகழு ராமசாமிச் சுமுக
னினியதவ புத்ர ரத்னம்

கார்பெற்றிலங்கு கண்ணன்மீ துசுக்குதமிழ்
களர் விசிஸ்டாத்வைதமாய்
சுருதிபெறக்காட்டினன் நிதிபெற்ற புவிமீது
கண்டுவமு தெனக்கனிந்தே

பேர்பெற்ற செந்தமிழ் புராண சாஸ்திரங்களுணர்
பெரியரும் பெற்பினேடு
பிரியமுறு மவணண்டி மால்சைல தேசிகன்
பெருமையுடன் வாழ்கமாதோ (11)

இஃது பொள்ளாச்சி தாலூகா ஆனைமலையில் வசிக்கும்

இன்னூலாசிரியருடைய வம்சத்தரும் சித்ராரூட

நூலாசிரியருமான ஸ்ரீமான் பொன்னுசாமி செட்டியார் குமாரர்

முத்துநரசிம்மலு செட்டியாரவர்களியற்றிய

அறுசீர் கழிநெடிலாசிரிய விருத்தம்

மணிகொழித்திடுகட லனிவளைத்திடுஜெய
மகிதலத்திடை சிறந்த
மலையாண்டி புரிவளர் கலைகோடனருள் வரன்
மகயாக மன்னகுலனும்

அணியணித்தொடைனிரை யசைமோனே யெழுத்தொழுங்
கமைதியிற் குறைவில்லதாய்
அம்விசிஸ்டாத்வைத பரத்வ நிர்ணயமெனு
மமிர்தமிவ்வுலகினற்கே

குணமுள தெனயெவர் களுமிரு தயமதிற்
கொளவுண வளித்த னன்காண்
குணித்திடும் மறுனுங்கு யில்லினன் மாசெட்டிய
குலசிரேட்டிரன் சற்குணன்

கணியலென் ராமமால் செய்தவத்துரு நலன்
கனசைல தாசனுமன்
கரியனுயகனடி பிரிவிலானகமுளான்
கவிவலான் வாழ்கமாதோ. (12)

---

இஃது மலையாண்டிபட்டணம் மதுரைத்தமிழ்ச்சங்கத்தின்
ஓரங்கத்தினரும் கோகலே முதலிய நூல்களின் ஆசிரியரும்
பி. ஏ. பட்டம் பெற்றவருமாகிய
உ. வே. கோவிந்தசாமி ராஜு அவர்களியற்றிய
நேரிசை ஆசிரியப்பா.

யவரும்புகழு மிந்திய நாட்டில்
எண்ணில் மதங்க ளெண்ணின்றெழுந்தால்
மெய்மையிழந்தும் பொய்மை சிறந்தும்
கண்டதே காட்சியாய் கொண்டதே கொள்கையாய்

உண்ணலுரங்கல் உடுத்தலே யின்பமாய்
வருந்துபவர்க்கொரு மருந்தெனச்சிந்து
இன்னிசைப்பாவிற் சொன்னயம்பயப்ப
வேதப்பொருளை யோதற்கெளிதாய்

கற்றோர் கல்லார் மற்றோரெவர்க்கும்
பயன்படு மாராய் நயப்பட வெழுதி
அச்சிட்டனனும் மெச்சும்படியவன்
யாலடிமறவாச் சீலனன் மனத்தான்.

அறுனுன்கு மனேயின் அன்பன்றும
சாமியின் செம்மல் மாயலேயாண்டி
பட்டணத்துறையு மென்னிட்டனுவான்
ஸ்ரீய சைல தேசிக தாசனே (13)

இஃது இருபத்தினான்கு மனையோரான இந்நூலாசிரியர்
குலகுரு கோடி கன்னிகாதானம்
திருவேங்கடதாதாசார்ய சுவாமிகள் அருளிச்செய்த
அறுசீர் கழிநெடிலாசிரிய விருத்தம்

தேவராய் மூவராய்த் தெளியாத வொளியுருவாய்ச்
சிறந்த வெல்லாப்
பாவனையின் பொருளாயும் பற்றில்லா விகபரத்தின்
பயனதாகி
எவருமற் றுரைறியா காரணனைப் பரமென்ன
இசைத்துச்சொன்ன
பாவலனும் ஸ்ரீசைல தாசனுரை சிந்திதனைப்
பாரீர் பாரீர் (14)



இதுவுமது அறுசீர் கழிநெடிலாசிரிய விருத்தம்.

வேதப்பொருளோ விளங்கு மனுவால் விவரித்துள்ள
நீதிப்பொருளோ யுபநிடதம் நீண்ட புராணவிதி காசத்தா
லோதும் பொருளோ வெட்டெழுத்தினுண்மை பொருளோ
யுயர்வான (15)
ஆதிப்பொருளோ சைலதாச னுரையும் சிந்தினுட்பொருளே

---

இஃது பொள்ளாச்சி தாலூகா காளியாபுரம்
போர்டு ஸ்கூல் எட்மாஸ்டர்
சு. செல்லமுத்து உபாத்தியாயர் இயற்றிய
அறுசீர் கழிநெடி லாசிரிய விருத்தம்.

ஸ்ரீசைல மொருசார்பு யில்லாது தனிமொழியாய்ச்
சிறப்பமேதபோ
லார்சிலநேரொவ்வா ஸ்ரீசைல தாசனன்பா
லறைந்த சிந்தி
னார்சீலப்பிரசமதை யுட்கொண்டார் பெற்றபய
னுரைக்கிலன்றோ
பேர்சீலமுடையவர்க்கு பெரும்பயனைப் பிறவாத
நெறியாமன்றே (16)

இஃது மலையாண்டிபட்டணம் ரா. திருமூர்த்தி செட்டியார்
என்றழைக்கிற
அரங்க ராமாநுஜ தாசரியற்றிய
இரட்டையடி ஆசிரிய விருத்தம்

பூந்தாது கமழ் துளவத் தொடைமாயன் பரமனெனப்
புராண மறைவே
தாந்தமிகுஞ் சுருதிபிதி காசமொடு வந்திட்ட
தக்கநூல்கள்
பாந்தளின் மீதுயிலு மன்னோ னன்றியிலைப்
படியின் மிக்கப்
போந்தவற்றை மோகனசாஸ்திர மயக்காற்
பிணக்குப்பேசும்
மாந்தருக்கும் மற்றவர்க்குந் தெளிவறிய ஞானமா
வனத்தைக்கொண்ட
சாந்தருரை மலையாண்டி புரிவளரும் ஸ்ரீமனருள்
சைலதாசன்
ஆந்திரத்திலுட்பொருளை யனைவோர்க்குந் தெரியச்செய்
தனையசிந்தை
ஈந்தனனிவ்வுதவிக்கி கைமாறு வேறுண்டோ
இசைப்பவர்க்கே (17)

---

இஃது கணியூர் வித்வான் அரசப்பபிள்ளை குமாரர்
பழனியப்பபிள்ளை இயற்றிய
இரட்டையடி யாசிரியப்பா.

திருவரத்திற் பெற்றவர்க்கும் மேலாய பரம்பொருளைச்
சிந்திக்கு மடியரான
செய்யபல் கலைகற்ற துய்யவறி வாளரும்
செல்வமிகு மாந்தர் வாழும்
ஒருபுரியு மிதர்க்கொவ்வா தெனவோது பெருநீரை
யுறுமாழிநதிவளத்தை
ஓங்கியநற் கன்னலொடு சென்னல்பல வாராம
முயர்பெரும் பண்ணை சூழப்

பெருகின்ற மலையாண்டி புரியினில் வளர்கின்ற
பெற்றிமிகு காமாக்ஷியாம்
பேண்ணமிர்த வரபாலராகி விசாலாவதியும்
பெருகச்சி வரசு புரியும்

இருபனுன்மனைவந்த யாரெட்ய கோத்திரத்
தியல்ராமசாமி தவமே
இப்புவியிலுருவான யவனுண்டி யென்னுமோ
ரின்பெயர் வகுத்துதாதர்

அருள்சைலதேசிகன் யன்பினொடு யின்பருரை
யாருமோர்ந்துய்ப்ப யுகை
மாக்கியதை ரட்சித்தழிக்கின்ற செய்கையும்
அகிலகா ரணங்களெல்லாப்

பொருளாகு நாரணன் பரமென்று நிசசித்த
புராணமொடு வேதமெவையும்
புகழ்பெற்ற நூல்கள்பல பிரமாண மாகவே
புகழ்வதெல்லா மெடுத்து

அருவான பரவஸ்து யவனால் வேறில்லை
யாதலா லவனையடைய
ஆழ்வார்கள் செய்தபல வாதார மதுகாட்டி
அனுஷ்டிக்கு முறைமை யெல்லா

மொருசிந்து யிசையி லிருபத்துனல் பிரகரண
மோதிதற் குவமையுண்டோ
ஒப்பரிய பாகவதர்ச செப்பரிய நாவலர்க
ளுளமகிழ்ந்திடவு மாதோ. (18)

---

இஃது மலையாண்டிபட்டணம்
வ. ப. சுப்பயை கவுண்டரவர்களியற்றிய
இரட்டையடி ஆசிரியப்பா

மன்னர் புகழ் பொன்னுலக மின்னதற் குவமையாய்
மதிப்பிடவு மாகாதென
மறையோர்க ளுரைகின்ற னிரையான வேள்வியும்
வளர்கின்ற பெருமையன்றி
வானத்தளாவு மாளிகை மாடகூடங்கள்
மலிவுற்ற வாவணங்கள்
மலரோனு முரைகின்ற மறைமாது வகலாத
வுண்மைபெரு மலையாண்டிமா

நன்னலப்புவியிலே மன்னிவாழறுனுன்கு
வம்சாதி ராமசாமி

நற்றவத்துற்றுவளர் கொற்றமிகு மவனுண்டி
நற்குணன் சைலதாசன்

நவையுறும் மாகமத் துறைமோகனம் பென
நவிலினூற் பலவானதை

நாவலர் பாவலர்களோடு மேவுவரோயிங்ஙன
நன்மொழிக ளாகவேதான்

சொன்னயச்சுருதியா மறைகளின் முடிவிலே
துலங்குமச்சோதி யெனவே

தொல்வினைப்பயனுமா யவர்கிடர் கெடுத்துமே
துருசருத்திட வல்லனுய்

தூயனுன்முகனுதி தேவர்க்கு தேவனுய்
சொல்லுகை வல்யமாவோன்

இன்னலில்லத்தேவர் தங்களிட தொழிலுமா
யியற்றுபல மாயையாயும்

ஏற்குமுறைவிடமான யண்டகோடிகளெலா
மிருந்து யில்லாது னிற்கும்

இனையிலாறுரணன் றுனன்றிவேறில்லை
எனவிசிஸ் டாத்துவைதம்

இயல்பான பரநிச்ய மெல்லவ ருணர்ந்திட
இசைத்தனன் வாழ்கமாதோ (19)

இஃது பொள்ளாச்சி தாலூக்கா ஆனைமலையில் வசிக்கும்
தமிழ் பண்டிதர் வாத்தியார்
ஸ்ரீமான் N. A. சிவசூரியம்பிள்ளையவர்களாலியற்றிய

வெண்பா.

அவனுண்டி ஸ்ரீசைல ரன்புடனே சொற்ற
நவரசமார் சிந்துவினை ஞாலப் பவரோக
பற்றறவே விட்டுப் பரமபத மடையக்
கற்றவருங் கேள்க்கக்களித்து (20)

இஃது உடுமலைப்பேட்டை ஸ்ரீமான் கன்னிச்சமீன் சரபம்
அ. முத்துசாமிக்கவிராயரவர்களியற்றிய
14 சீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

குருமணியை யுள்ளங்குறித்துலக மாந்தர்முன்
கூறும் பரத்துவங்கள்
கோதில்வடமொழியினுப போதருந்தென்மொழிக்
கொழிகவிதைனூல் பலவினும்
தருபெரிய வாக்கியப் பொருளெலா மெளிதிலுணர்
தன்மையாஞ் சிந்துபாடி
தமிழமுத தாரையாத் துதிவிசிஸ்டாத் வைத
தரும நிர்ணய மீய்ந்தனன்
மருவுமிருபத்திரன் மணியாளர் வர்க்கத்து
மாரெட்டையார் கோத்திர
மாதவானந்தரகு ராமசாமிக்குரிசில்
மலையாண்டி பட்டணத்தான்
திருவருட்சுதனெங்கள் வரதரிஷி கேசவன்
செம்பதும பதவாஞ்சையான்
திசையாண்ட பேர்குலவு மவனாண்டி மதியூக
சீலசுகு ணாலனிதியே (21)

இஃது ஆனைமலையில் வசிக்கும் இராமாயண பிரசங்கியாகிய
ஸ்ரீமான் க. வெங்கிட்டரும நாய்க்கரருளிய
சிந்து

மலையாண்டிபட்டணமாம் நகரம், வாழுமிரு பத்துனன்கு மணியாரில், கலைஞான முழுதுணர்ந்த செல்வக் கண்யராமசாமி யருள்புண்ய புதல்வர், அவனாண்டி பரஞானத் துள்ளபடி யாய்ந் துலகமாவுமுய்ய வருள்செய்தான், பவரோக மருந்தாக அத்து வைத, பரத்வ நிர்ணயச்சிந்து பகர்ந்தனனே, கல்வி கேள்விகளி ல்வல்ல புலவர்தங்கள், கருத்தெலாம் பொருளாதிகளில் செலுத்த வல்வினைகள் மாய்வதுபோல மாயாமல், மாதவன் திருப்பதத்தில் மனஞ்செலுத்தி இகபரசாதனமாய் கற்றோர்க, ளெவரும் புகழ் ந்திட இப்பிவியின்கண்ணே, சுகமாகவாழ்ந்திடவே அருளினன், சுவாமிகடமைநான் சொல்வதென்ன [தந்தனம்] (22)

சிறப்புப்பாயிர தனியன்கள் சம்பூர்ணம்.

தேசிகன் திருவடிகளே சரணம்.

    

ஸ்ரீ நிகமாந்தமஹா தேசிகாய நம:

## விசிஸ்டாத்வைத பரத்வ நிர்ணயச்சிந்தின் நூலாசிரியரவர்களின் அபிப்பிராய

# விஞ்ஞாபனம்.

---

ஸ்ரீ பரமகாருணிகரான ஸர்வேஸ்பரன் இவ்விருள் தருமாஞாலத்தில் பிரபன்னருஜ்ஜீவனார்த்தமாய்ச் செய்தருளின அநேக விபவாவதாரங்களிலொன்றான ஸ்ரீ கண்ணபிரான் பார்த்தனுக்கு யுத்தசமயத்தில் அருளிச்செய்த பரம ரஹஸ்யார்த்தங்களைப் பிரிதிபாதிக்காநின்ற ஸ்ரீ பகவற்கீதையென்னும் மோட்ச சாஸ்திரத்தின் தார்ப்பர்ய விஜயத்தையும் அச்சர்வேஸ்பரன் நியமனப்படி அவதரித்த ஆழ்வாராசாரியார் அருளிச்செய்த திராவிட் வேதசாரமான திருவாய்மொழி, திருமொழி, பெரியதிருமொழி, முதலிய திவ்ய பிரபந்தங்களான திராவிட சாராம்சத்தையும் கீர்வாணவேத சாராம்சத்தையும் இவைகளின் உண்மைப்பொருளை கண்டறியமாட்டாத ராஜஸ தாமஸ ப்ரகிரதிகளான பல பெயர்கள் தம்தாமுடைய இச்சைக்கு தக்கபடியாய் பலவிதமான பொருள் செய்துக்கொண்டு அனர்த்தப்படுவதைக்கண்டு சகிக்கமாட்டாமல் அச்சர்வேஸ்பரன் நியமனப்படி அவதரித்த சாக்ஷாத் சேஷாவதாரமான ஸ்ரீ பகவத் ராமாநுஜயதீந்திரர்தம் பரமகிருபையால் அதுகளுக்கு ஓர் பாஸ்யமிட்டருளினார் அந்தப்பாஷ்யமும் சமஸ்கிருத பரிபாஷையாயிருப்பதினாலும் திருவாய்மொழி முதலிய திவ்யப் பிரபந்தங்கள் தமிழ் பாஷையானாலும் கீர்வாணவேத சாராம்சத்தைப்பொருந்தியதால் அதுகளை வியாக்யானம் செய்தருளின பரம காருணிகரான ஸ்ரீமதுர கவிகள், நாதமுனிகள், பெரிய வாச்சான் பிள்ளை பிள்ளைலோகம், ஜீயர் முதலானவர்கள் 3, 6, 12. 18, 24 36 ஆயிரப்படியாய்ச் செய்தருளின வியாக்யானங்களை ஓராண்வழியில் தெரிந்துக்கொள்ளவேண்டியபடியால் இக்காலத்துக்கு ஷடி பாஷ்யார்த்தங்களை தெரிந்துக்கொள்ள ஆசைப்பட்ட பெருகுபெயர்கள் ஓராண்வழி வியாக்யான ஞானமில்லாமையாலே யதைக்கை விட்டு பகவர்க்கீதைக்கு பாஷாந்தரங்களிலிருக்கும் ஏனைய வியாக்யான மொழிப்பெயர்ப்புகளையும் வேதவிருத்தமான ஆகமங்களிலும தாமஸ நூற்களிலுமுள்ள வியாக்யான மொழிப்பெயர்ப்புகளையும் அப்யசித்து தத்துவங்களை எல்லாம் மாறாக நினைந்து அனர்த்தப்படுகிறார்கள் ஆகையால் அவ்வித அனர்த்தத்தை பரிகரிப்பதற்காக அநேக பாகவதோத்தமர்கள் வேண்டுகோளின்படியாயும்

அடியேனுடைய சென்மவிருத்த சித்யார்த்த நிமித்தம் பூர்வாச்சாரிகளுடைய வியாக்யான கிரந்தங்களின் சாராம்சங்களை அல்பக்யான வடியேன் அதை விசிஸ்டாத்வைத பரத்வ நிர்ணய தீபிகை என்னும் தலைப்பெயர் கொடுத்து எழுதலான வசனகாவியம் அதிக விரிவடைந்து தற்காலம் பிரசுரிக்க பேப்பர் கிடையாத நிமித்தம் அதனை சங்கிரகமாக அத்தலைப்பெயரில் தீபிகை என்பதை மாற்றி சிந்துவென இசையினுல் சர்வக்கியானரான பூர்வாசாரிகளுடைய திருவுள்ளக்கருத்துகளை அறிந்து எழுதும்படியான சக்திசெழுமில்லாத நாயினேனிப்படித் துணிந்ததை பார்க்க அடியேனுக்கே லச்சையும் பயமுமுண்டாகின்றன வீரலட்சுமியை முன்னிட்டு யுத்தத்திற்கு துணிவாரைப்போலவும் திண்ணை முதலிய யுயர்ந்த ஸ்தானங்களில் நிற்கவைத்த குழந்தைகள் அத்திண்ணைக்கருகில் தம் தாய்தந்தையர்கள் நிற்க கண்டார்களாகில் இவர்கள் நம்மை தாங்குவார்கள் என்ற நம்பிக்கையால் துணிந்து கீழே குதித்து விடுவதைப்போல் சர்வேஸ்பரனும் அவரால் மயர்வற மதிநலமருளப்பெற்ற பூர்வாசாரிகளும் நம்மை கைவிடார்களெனத் துணிந்து இதில் பிரவர்த்தித்தேனுகையால் அவர்கள் இதில் சிறிதும் குறைவு வரச்சஹியார்களென்று சாதுக்கள் துணிவதோடுகூட பிரகிருதி வசனுன அடியேனுல் சிறிது பிழைகள் கண்டாலும அதனைப் பொருத்தருளவேண்டுமெனப் பிரார்த்திக்கின்றேன்.

இந்நூலினிற்கு விசிஸ்டாத்வைத பரத்வ நிர்ணயமென மகுடம் சூட்டியது யாதெனிலோ.

இரண்டு படிபட்டது துவிதம் என்றும் ஒரு படிபட்டது அத்வைதம் என்றாலும் அதில் கூறுவது பிர்மம் ஒன்றென்றும் அது சுயம்பிரகாசமென்றும் நாமரூபங்களற்று விளங்குவதென்று கூறினும் அதனை சேதனர் அடைவது அசாத்தியம் அடைந்தாலும் ஆனந்தமென்னும் கலம்பூச்சியம் மேலும் மனேவாககு சாயங்களினுல் அரியவொண்ணுதென்று அத்வைதம் கூறுகின்றதினுலேயே குணமும் ரூபமும் உண்டென்றும் அவைகள் அளவிடப்படாதென்றும் கூறுகின்றன ஆழ்வாராசாரியரும் சமையாசாரிகளும் இகபரசாதனமான சகலசித்யார்த்தங்களும் அச்சாவதாரபிம்பங்களிலிருப்பதாய் அவைகளையே ஆராதித்தாலும பிரளயத்தில் தனினின்ற வெம்மான்றன்னை அருமறை நாரணனென்றே சொல்வதாலும் அடியில் காணும் பாசுரத்தினுலும் இதர்க்கு விசிஸ்டாத்வைத பரத்வ நிர்ணயமென மகுடம சூட்டப்பட்டது.

யாவையு மெவையுந்தானு யவரவர்சமையந்தோரும்
தோய்விலன் புலனைந்துக்குஞ் சொலப்படானுணர்வின்மூர்த்தி
ஆவிசேருயிரினுள்ளான் யாதுமோர் பற்றிலாதான்
பாவனையதனைக்கூடி லவனையுங் கூடலாமே. என்பதாலும் காண்க

இப்படிக்கு அடியேன் ஸ்ரீசைல தேசிகதாசன்.









ஸ்ரீமந் நாராயண பரப்பிர்மணே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ நிகமாந்த மஹா தேசிகாய நம:

# விசிஷ்டாத்வைத பரத்வ நிர்ணய சிந்து.

## கடவுள் வாழ்த்துப்பிரகரணம்.

### தனியன்கள்.

### ஸ்ரீ வேதாந்த தேசிகர் துதி

1 * ராமாநுஜ தயாபாத்ரம் ஞ்யான வைராக்கிய பூஷணம்
ஸ்ரீமத் வேங்கட நாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம்

### தாதாசார்ய சுவாமிகள் துதி

2 * சடமருசன வம்சாதி ராகாசந்தரம் கிருபாநிதம்
சேஷாசல தாதாசார்யம் வந்தேமனு சம்மதம்

### இராமாநுஜ முனிவர் துதி

3 * எய்ந்த பெருங்கீர்த்தி ராமாநுஜ முனிவன்
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன் ஆய்ந்தபெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ்வேதம் தரிக்கும்
பேராதயுள்ளம்பெற.

### நம்மாழ்வார் துதி

4 * மனத்தாலும் வாக்காலும் வண்குருகூர்பேணும்
யினத்தாரையல்லா திறைஞ்சேன் தனத்தாலும்
எதுங்குறைவில்லை யெந்தை சடகோபன்
பாதங்கள் யாமடையப்பற்று

5 * வான்றிகழுஞ்சோலை மதிலரங்கர் வண்புகழ்மே
லான்றதமிழ் மறைகளாயிரமும் யீன்ற
முதற்றாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த
யிதத்தாயி ராமாநுஜன்

* பூர்வாசாரிகளருளிச்செய்தது.

6 * மிக்கவிறைநிலையும் மெய்யா முயிர்நிலையும்
தக்கநெறியுந் தடையாகித் தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதுங்குருகையர் கோன்
யாழினிசை வேதத்தியல்

7 ஆரங்கம் திருமங்கை யருள்செய்ய வருமறையி னகண்டமான
வாரெல்லாந் தூய்தமிழால் மதுரகவிக் கினிதுரைக்க வந்துதெய்வம்
வேறில்லைவிண்டுவன்றியெனவன்பா லுலகருக்கு விரித்துக்காட்டும்
மாறனிரு பதமலரைக் கோருவதேயன்றியொன்றைமனத்துள்
[வையேன்

8 மறைமலரா லரத்தமர்த்தும் மால்பரனென்
றுபநிடமு மறைகளெல்லா
முறைபொருளை யாவருமோர்ந் துணருகைக்குச்
சிந்திசையி லுகந்துசொல்லத்
திரைகொழித்து வருபொருணை மருங்குறுநற்
குருகைநகர்த் தெய்வம் மென்னப்
பொறைமிகுத்த குணங்கெழுமா சிறுமுனிவ
னிணையடிகள் போற்றிசெய்வோம்

திருமால் துதி

9 உற்பத்திக் கனவெரியோ னுதவுலகை யழிப்பதற்கு யூழிகாலக்
கற்பத்தி னரனாகிக் காற்பதற்குச் செங்கண்மால் கண்ணனாகி
நற்பத்தியுடையவர்க்கு நலங்கிளரும் பரமபதம் நாளும் வாழச்
சிற்பதத்தை யளித்தருள்செய் தேவனிரு பதமலரைச்
[சிந்தைசெய்வாம்

பிர்மதேவன் துதி

10 வெண்மலர்க் கிளத்தியாள் வேத மோதியெ
தண்புனற்கட லுலகே ழிரண்டொடு
விண்மனுள் ளோர்கள் பல்விதச் சிருஷ்டிசெய்
அண்ணல் தன்னிரு பதமவைகள் காப்பதாம்.

சிவன் துதி

11 கொன்றையஞ் செஞ்சடைக் குலவு கங்கையான்
பொன்றிகழ் மணிமுடிப் பாந்தற் றோளினன்
அன்று யிவ்வுலகமுண் டமலனார் வலத்
தென்றுவாழ் சங்கர னிருபத மிசைத்தனன்

பரமபதனாதன் துதி இஃது பரத்வம்

12 * உயர்வற வுயர்நல முடையவ னெவனவன்
மயர்வற மதிநல மருளின னெவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதியெவனவன்
றுயரறு சுடரடி தொழுதெழென்மனனே

### க்ஷீராப்பதிநாதன் துதி இஃது வியூகம்

13 உலகமீரேழுந் தன்னுள் ளொடுக்கியே பிரளயத்தின்
பலவிதவான்மா மற்றும் பல்கோடி யமரர்தம்மை
சலனமில் லென்னத்தானே சர்வரட்சணைசெய்தெல்லா
நிலமதை மீளச்செய்யும் நெடியவன் பதங்காப்பாமே

### ஸ்ரீ வைகுண்டநாதன் துதி இஃது விபவம்

14 அன்றுலக மேழினையு மகட்டடக்கி வெளிநாடு யாகச்செய் நீ
சென்றுலகோர் பலதேவர்க் கிடுக்கமுறும்
வழிநின்ற தேசமுகத்தோன்
பொன்றிகழும் மணிமுடிபத் தின்னிலத்தில்
வீழ்ந்திடவே போரிற்செற்ற
அன்றலருந் தார்புனையும் தயரதனர்
சுதன்பாதம் அணிவன்சென்னி

### ஸ்ரீ வாசுதேவன் துதி இஃது அந்தர்யாமித்வம்

15 அருவாயு முருவாயு மண்டமுமா யப்பாலு மவற்றிற் கெல்லாப்
பொருளாயும் பரவைபல பொருப்பாயுமைம்பூதம் பொருந்தவுற்று
வருமசர சரமாயும் வகுத்தபல தேவருமா யவற்றினுள்ளே
மருவாமலிருந்துறையும் பரவாசுதேவனுமென் மனத்துள்ளானே

### ஸ்ரீ அரங்கநாதன் துதி இஃது அர்ச்சாவதாரம்

16 அருமறைகள் தனக்கெட்டா வண்டகோடிக
ளெல்லா மாக்கியன்பர்
பெருபதத்தை யினிதடையக் காவிரினன்
னதிமிகுத்துப் பெருகியோட
விருபாலின் இருவங்கத்தரவணையிற் கண்டுயிலு
மிணையில் செய்யக்
கருமேக வடிவுடையான் திருவடியிச்
சிந்தினிற்கு காப்பதாமே

### திருமகள் துதி

17 நாரணனர் திருவுரத்தி லமர்ந்தெந்த
நாளொருவா நாகம்மண்ணும்
பூரணமாய் நிறைந்து திதிலயத்துதிப்பம்
மூவருக்குப் பொருந்தநல்கும்
காரணியே யுனதருளால் பரம்பொருளை
மறையுரைத்த கருத்தையெல்லாம்
தாரணியோர் தெறிவுறநற் சிந்துவினுற்
சொலநினது தாள்தந்தாளாய்

சரஸ்பதி துதி

18 மாலுந்தி வந்தவேதன் வாக்கிலே நின்று வேதம்
நாலுவின் மண்ணுள்ளோரு நவின்றிடக் கிருபைசெய்த
நூலெனும் பனுவலாட்டி நுண்ணறி வளித்தென்னுளிற்
சாலவே யிருந்தின்னூற் சொற்றனைய னுக்கருளுவாயே

பராசத்தி துதி

19 பரமென்னுமாத்மாவின் சத்தாகிப் பாருலகை
நீராக்கும் பரசிவத்தின்
ஒருபுரத்துப் பாதியுட லாயமர்ந்தயுத்தமியே
யடியனுள்ள மூவந்துவந்து
விரிவுளவப் பரம்பொருளே நாரணனென்
றருமறைகள் விளக்கித்தந்த
அருசெயலை விசிட்டமெனு மத்வைத
நிர்ணயத்துக் கருள்செய்வாயே

கோடிகன்னிகாதானம் தாதாசார்ய சுவாமிகள் துதி

20 ஒருவட்டக் கடலுலகிலுயர் மறையின்
பொருளையெல்லா முறைப்பதான
திருவட்டகாமினியவருளாலெயென்றனுக்குத் திருத்தியந்தப்
பொருளிட்ட தனையளித்தென் பவமகற்றி
யாட்கொண்ட பொன்னின்வண்ணத்
துருவிட்டதிருவேங்கடா சாரியிருபதங்க ளுளதென்சென்னி

பன்னிரண்டாழ்வார் துதி

21 திருமகளென் றுரையுமுறக் கருமேக
வடிவினன் செய்யபரமென்றசெயலைச்
செப்புமொரு ளுன்மறையி னுட்பொருளை
யளவிட்டு சிந்தைசெயவேண்டுமென்றால்
மருமலர்த்தவசிலுறை யயனரனுமிந்ராதி
மாமுனிவராலுமெண்ண
மாயமிகுவானபல லீலைகுருகாபுரியின்வந்தவதரித்த மாறன்
அருள்மொழிய லாதுமற் றாழ்வாரதன்பின்ன
ரவ்வழியிலுற்றபலரும்
அன்பினலர்ையுமிக வின்பரசமானவிதை
யானெடுத்தோதவென்றால்
பெருமாயிதன்முற்று ஆயினும் பேதை நான்
பேணியவர் தாட்டுணைகளே
பெற்றுசீதரன்மகிமையுற்ற விச்சிந்திதனைப்
பேசினேன் புவியின் மாதோ



கடவுள் வாழ்த்துப்பிரகரணம் சம்பூரணம்

## அவதாரிகை

### ஆழ்வாராசாரியர் அவதரித்ததற்கு காரணம்.

### சிந்து.

(தந்தனந் தனதான தனதனந் தந்தனந் தானதன தனனன)

1 திருவளர்மார்பனான தேவாதிதேவன்
ஸ்ரீரகுபதியானசர்வேசன்
அருவமாமன்னேன்பரம் பதந்தனே
ஆரணத்தாலுமானந்தத்தாலும்
வருமுபநிடத்தாலும் ஆழ்வார்பல
மாமுனிவராலுமதிப்பிடலாகாப்
பெருவதிசயத்துடைய நீண்டுயர்
பிரகாரகோபுரமண்டபமும்

2 மன்னுதிருப்படைவீட்டில் மணிமாட
மாளிகைகளால்சூழப்பட்டதுவும்
உன்னதச்செம்பொன்னாலே செய்ததான
ஒப்பிலாக்கோபுரத்திலற்புதமாய்
துன்னியமாணிக்கக்கால்கள் ஆயிரத்தாற்
றுலங்குந்திருமாமணிமண்டபத்தில்
நன்னடுவில்விளங்குகின்ற ரத்னமொளிர்
நவையறுசிம்மாதனமேலே

3 உடனமர்காதல்மகளிர் மண்மக
ளொப்பில்திருமகளாயர்மாதரான
விடநிகர்வேல்விழியா ராகிநீளா
விளங்குபூமிகளோடேகூடி
அடவுள்ளுபயலீலை களிலவர்
ஆனந்தநித்தியருமுத்தர்களும்
படவரவனந்தனொடு சேனைகருட
பகவனிவர்கள்துதித்திடவவரும்

4 ஆனந்தமாயிருப்போ ரிவரைப்போல
அடையச்சம்சாரிகளறிவிலராய்
ஈனத்திலகப்பட்டுமே எல்லவருஞ்
சிரகறுபட்சியைப்போலானதையே
தானந்தமூர்த்தியுணர்ந்து தனையுணர
சர்வகரணகளேபரத்துடனே
ஞானத்தைக்கொடுத்தருள அதனையவர்
நன்றாயுணர்ந்து விசையத்தாக்கத்

5 தன்னைவணங்கிடவேண்டி சர்வேஸ்பரன்
தந்தசரீரத்தையதன்படிசெய்யார்
மன்னிடாரவன்நினைவை ஆறுநீந்த
மனமுவந்தருள்தெப்பமதனுலே
அன்னிலேகரைசெராது அதிற்சென்று
அலைகடல்மூழ்கப்புல்லருக்குத்தந்த
இன்னலுறங்கத்திதனையே கொண்டுபசு
வின்வாலைத்தரிப்பதுபோலவன்றி

6 களையெடுத்திடக்கொடுத்த கோலினைக்கொண்டு
கண்களைக்கிளரியிடுவார்போல
இளநகைமாதராசை முதலாய்
இப்புவியிலுள்ளபலயின்பமதனல்
தளையல்தன்காலிலிட்டுக் கொண்டவர்போல்
தானேயனர்த்தப்படுவதைக்கண்டு
களைகணுயுலகமெல்லாம் ரட்சித்துக்
காக்கின்றகருமுகில்வண்ணன்றனே

7 சாத்திரத்தையுரைத்தருள அதனையவர்
சங்கைபறக்கற்றுணரவெகுகாலம்
பூர்த்தியில்லாதிருந்தமையால் வாசுதேவன்
பொருத்தியெட்டெழுத்து மந்திரத்துள்ளே
சேர்த்தியருள்செய்திடவே யதனையவர்
தெரிந்திடார்கள்கர்மபலமதனல்
ஆத்மாபகாரம்பண்ணி தூஷிதர்க
ளாகியனுதிகர்மவாசனையால்

8 இந்தவிதமானவகையைக் கண்டுதேவ
னிசைந்திடாச்சீட்டுக்குச்சேனைகளை
பந்திபந்தியாகத்திரட்டிக் கொண்டுபோய்
பகைவனைவெற்றிகொள்ளுமாசனைப்போல்
சிந்தைசெய்துநாம்தானே யிவர்களைச்
சேர்த்திப்பிடித்துக்கொண்டுவருவோமெனதன
அந்தமுள்ளராமகிருஷ்ண னென்றபல
வவதாரமதுசெய்துமவைகளினுல்

9 செய்பவரி தானசெய்கை மனிதருக்குள்
செய்துகாட்டியும்படாவவஸ்தையெல்லாம்
மெய்யனுஞ் செய்துபார்த்து திருந்திலர்
மிக்கவிரோதவசுரப்பிரகிருத
வெய்யவர்களாகியவர்க ளெதிரிட்டு
வின்னலுறுங்கதிவீழ்வதைக்கருதி
துய்யவுலகோர்களுய்ய பிரளயத்தில்
துலங்கவயற்றமைத்ததூயதாய

10 நத்துதிகிரேந்துகையன் விசையரான
நமக்கிதுசாத்தியமன்றுயெனவே
இத்தரையில்மிருகமதைப் பிடிப்பவர்க
ளியல்புமற்றொருமிருகத்தைக்கொண்டு
மெத்தவேபிடிப்பவரைப்போல் மானிடரான
இவர்களாற்காரியங்கைகொள்வதென்று
சித்தமதிலறிதியிட்டு விஸ்வச்
சேனனெனுடியனந்தன்ககபதியும்

11 ஆனயிப்பிரகிருதி யிவர்களொடு
யணியுமவைசியந்திவனமாலை
தானதுடன்கௌஸ்தவமும் பூமிகிளி
தன்பதுமமங்கைபஞ்சாயுதத்தை
வானநாயகன்பார்த்து நீவிரெல்லாம்
மண்ணுலகபுண்யதேசங்களிற்போய்
மானிடராயவதரித்து எனதுலீலை
மகிமைகளின்னதெனத்தெளிவித்து

12 வங்கமிகுங்கடலுலகைத் திருத்துமென
மற்றவர்காநாவருணங்களிற்பிறந்து
சங்கையற்றமறைப்பொருளை அருளினர்
தாழ்ந்தாரையுயர்த்துகைக்காகவேதான்
துங்கமிகுந்தமிழ்மறைக ளநேகமாகச்
சொல்லினரப்பரமன்றன்செயலால்
செங்கமலக்கண்ணன்குணத்தி லீடுபட்ட
செய்கையாழ்வாரெனச்செப்புவாரே

13 அன்னமெஞ்சொற்களெல்லா மறைப்பொருளை
அனுசரித்ததினலிவ்வுலகில்
இன்னலுறும்படியான பேதாபேதங்கள்
ளிருப்பதைக்கண்டுகொள்ளாதனாலே
கன்னலினுஞ்சுவையுடைய மதுரக்வி
கண்டுதெளிந்துநாதமுனிக்குரைத்தார்
இன்னமுள்ளவாழ்வார்க ளுரைத்தவற்றை
ஈரொருகுணங்கடந்தஎதிராஜர்

14 சொன்னபாஷியத்தாலு மற்றுமுள்ள
சொட்டைநம்பிகளொடுவெளியாக
பின்னமிலாவிவையெல்லாம் எளிதிலாகப்
பெருவதின்பொருட்டுலகோருக்கு
இன்னலின்றித்தெரிவகையாய் சொல்லுமென்
எனைச்சிலர்வேண்டியபடியாலே
நன்னயமாய்த்தமிழ்மறையை யுபகரித்து
நம்மையாழ்வார்முதலானவர்பதம்

15 என்னுடையசிரத்தமைக்கப் பெருவதான
யிணையிலாதபெருமகிழ்ச்சியெனத்
தன்னையுற்றதன்மையினு லிதனையெல்லாம்
சங்கிரகமாகவெடுத்தினிதாக
கன்னலெனுஞ்சிந்துவிசையில் சொலநினைந்து
கசடறக்கற்றமாந்தரின்முன்னே
சொன்னவிசையங்களைநன்றாய்த் தெரிந்துணர்ந்து
தொல்லுலகோர் பதங்கள்பெற்றுய்வீரே (கண்ணன)

அவதாரிகை சம்பூரணம்

கண்ணன் கழலிணை நண்ணுமன முடையீ
ரெண்ணுந் திருநாமம் திண்ணம் நாரணனே.

தேசிகன் திருவடிகளே சரணம்



ஸ்ரீ ஷைவதனை பரப்பிர்மணே நம:

ஸ்ரீ மணவாளமாமுனிகள் துதி.

மாறன்தமிழ் மறையாம் வாய்மொழிக் கைந்நூறுக்
கேருறுநூற்றந்தாதி யியம்பியருள் சீருகந்த
மணவாளமாமுனிவன் மலரடியைத் தினம்மனமே
பணிவார்க்கு யேதுகுறைபார்

நூல்.

உ-வது பரப்பிர்மப்பிரகரணம்

(அவதாரிகை)

பிர்மத்துக்கு ரூபமும் குணங்களும் உண்டென்றும்
அவற்றை அளவிடப்படாதென்றும் கூறுகின்றனர்

அபசாரட்சமை

தந்தனந் தனதான தனதன தந்தனந் தானதன தனனன

16. பருதிருமூலகமதிற் கற்றுணர்ந்த
பாவலர்முதலாயுள்ள பண்டிதற்கு
விரிவுறும்பரவஸ்து அகண்டமாய்
விளங்கும்மகிமை வேதாந்தங்களில்
உரைசெயும் பொருளதனை எனதுசிற்
றுணர்வினிற் கெட்டியதைத்திட்டமுடனே
அறைவதற் கெண்ணியதுவே சிற்றெறும்புக
ளாலேகடலைத்தாண்டுவது மார்ஜாலம்

17 ஒன்றுதிருப்பார்க்கடலை நுகர்ந்திட
ஓடிவருந்தன்மையென நாடியடியேன்
நன்றுணர் மஹாரிஷிகள் ஆழ்வார்பல
நாதமுனிகள் சிலபரம்பரையாய்
என்றுமிவ்வுலகிலுள்ளோர்க் கீடேறவென்று
எடுத்துரைத்த பொருளையியன்றமட்டில்
இன்றுரைத்த ததிற்குற்ற மிருக்குமே
லின்னலில் லறிஞரிதமாகயேற்பீர்

18 அகாலகாலமாயும் பல்கோடியண்டத்
தப்பாலுமாயுமத னுள்ளாயும்
விகாரகுணமில்லான் தனையுணர
விதித்தசிருஷ்டியாமத னுள்ளில
தகாதுநின்றுதானே பிர்மாதியர்
சகலகாரண சதுர்விதபலமாய்
மகாரவாத்மகோடி களுக்குள்
மாதவன் நாரணனாப் விளங்கும்

19 ஒப்பிலாபரப்பொருளே அண்டகோடி
யுண்டுசெய்யுற்றனினைப் புருவதுதான்
அப்புவெனசொல்லாச்சு யதிற்கருணை
அகண்டமாயுருவதா லப்பெயர்பெற்றார்
எப்படிக்கருணையான ஜலத்திற்
இலக்கியம்நாரமதி லிருந்தமையால்
செப்பும்பரம்பொருளைத் தேவர்முதல்
ஜெகத்தவர் நாரணப்பிர்மமென

20 உணர்வுறும்பரப்பொருளி னிருதயந்தனி
லுற்றனைப்பே திருவாயமர்ந்தாள்
புணர்த்தயித்தன்மையினால் னாரணப்
பொருளைத்திருவுடனே கூட்டியொன்றாய்
எணத்துலைவில்லாமுனிவர் பிர்மாதிய
ரிந்திரன்முதலினோ ரேத்தினாகப்
பணத்துயிலுடையானை நிதந்துதி
பண்ணுவாரவன் திருப்பதயுகளம்

21 கிருபையே பாற்கடலாய் அனந்தனெனுங்
கிளரொளிப்பீடமதி லிருந்ததென்றால்
ஒருபொருள்திகழில்லா வரவினிற்கு
யுற்றவடமொழிப்பெயர் சேஷமெனுமே
அருமறைநனக்கெட்டா நாரணன்பல்
லண்டகோடிகளெனப் பிரிணமித்து
விரவியொடுக்கமாகும் செயலினில்
விளங்கியவிடஞ் சேஷமெனுமதலால்

22 ஒடுவிலேவிசிசமான பரம்பொரு
ளுறைவிடமெனச் சொலுமருமறைகள்
விடமிலாவரவணைமேற் றுயில்கின்ற
விமலனற்புதகருணை நிதியாய்ப்
படிவின்னுமீரடியா லடக்கிய
பரமன்திகரிசங் கொளிர்கையன்
முடிவிலின்பத்துமூவா முதலவன்
முற்குணத்திலமுதல்குணம் ரக்ஷணையே

23 உருவெனவந்தபடியா லவன்றனை
யுரைப்பர்விஷ்ணுவென ராசதமாய்
வருகுணஞ்சதுர்முகனாய் சிருஷ்டிகளை
வகுத்தனர்பலவகை யண்டங்களாய்
ஒருமுதல்வனிடையில் சராசர
மூந்தியிலுதிப்பது பொருளாதன்
கருவதன்மலருதித்த அன்னவனைக்
கழறிடுவார் முதற்பிரமமென

24 எங்கும் பரம்பொருளாய் நின்றவனை
ஈரிரண்டுதிக்கிலுற்று பஜித்தமையால்
பொங்கொளிசேர் முகமுளலாய் வேதத்தைப்
புகன்றதிற்சதுமுகப் பிரமனென
பங்கயமாதுற்றவுணர்வா விருதயப்
படிநின்றுவந்த மொழியுந்தியோனுஞ்
சங்கையிலாமறைபஜிக்க வாக்கினிற்
சாரதாயெனத்திருமகளமர்ந்தாள்

25 வந்திட்ட தாமததமாங் குணத்திலும்
வலத்திலும் முக்கண்ணனுய்ச்சங்கரிக்க
அந்தரியாமியாயும் மூவருக்குள்
அப்பரனுர்நின்ற செயலறிய
எந்தனுக்கதேதெளிதா விந்த
ஈரேழுபுவனங்களுண்டவன்றன்
விந்தையானயந்தருவில் வலதுபுரம்
விளங்கும் மாயையென்றசத்திரூபம்

26 அட்டவிதமாமதாம் பல்லுலகோ
ரனைவரும்புகழப் பொருடானே
மட்டில்லாச்சத்தியவன்றன் மாயையென
மாசினமதில் ருத்திரனுர்
முட்டியசெருவிலெதிர்ப்போற் சினமிகுந்த
முக்கண்ணனுர்தம் முருவையடையாமல
இட்டியவச்செருவினிடம் ஜெயம்பெறக்
கிடையாதென்றேமனுயுரைசெயுமே

பரப்பிரம்மப்பிரகரணம் சம்பூரணம்
ஆகப்பிரகரணம் 2-க்கு கண்ணிகள் 104
தேசிகள் திருவடிகளே சரணம்.

---

3 திருமந்திரப் பிரகரணம்

(அவதாரிகை) பிர்மம் என்னும் ஸ்ரீமந்நாராயணன் வேத வேதாந்தங்களைக் கடந்தவனென்றும் அவன் பிரணவத்தோடு கூடிய எட்டெழுத்தில் பிரிதிபாதிக்கப்பட்டவனென்று கூறுகின்றன.

தந்தனந் தனதான

27 எட்டெழுத்து மூன்றுபதமாய் வயங்கிய
யிணையிலாமந்திர ஜாலமடங்கும்
திட்டமுள்ள விதைபோலத் திகழ்கின்ற
திருமந்திரத்தினது பொருள்கேளாய்
கட்டியாகப்பால்தனையே செய்யமோர்
கலப்பதுபோலப் பலமந்திரத்தும்
ஒட்டியிதை யுச்சரியாத மந்திரத்தி
லுயிரில்லையிதப்பின்னுரைப்பேனே

28 முந்தியமுதற்பதந்தான் ஓமென
மூவாவுலகமெல்லா மதிலடங்கும்
விந்தையான நமபதந்தான் இரண்டென
விளம்புவரந்த மூன்றும்பதமே
அந்தமில்லாவாதிபகவன் னுக்கிய
வகிலலோகங்க ளதிலடங்கும்
சந்ததம் நாராயணனென அருமறைகள்
சாற்றும்முதற்பதம் பொருள்கேளாய்

29 பிரணவம் மூன்றெழுத்தாய் மன்னுமதிற்
பேரானவகாரம் முதலெழுத்தில்
சரணுகதியடைவார் தங்களுக்குச்
சர்வதேசகாலபல வவஸ்த்தைகளில
வருணமார்ஜீவகோடி தனிலேசர்
வப்பிரகாரத்திலே ரட்சணையாயும்
பெருமிதமான சாந்த குணமிருத்த
பேரானவிஷ்ணுவெனப் பேசியிடுவோம்

30 ஒப்பிலா வகாரமதுவே ரட்சணத்தி
லுறைவது யெனப்பலவவதாரம்
கற்பிதமதாகவந்த மச்சமுதற்
கலிக்கவரையுளதன் னாரணனே
செப்புமவன்றன்னிடையிலே யுதித்தபெருஞ்
ஜீவகோடி சென்றுபரம்பரையாக
அற்புதமானதேகாதி தன்னில்வை
அடைய மகாரமாத்மாவாமே

31 சொல்லுமறை மாத்திரைதான் விளங்குதே
ஜோமயமானதொரு நாதவிந்து
அல்லலுறும் பிறப்பிறப்பை யில்லாம
லகற்றியே யரனயற்கரிதான
நல்லபரம்பதந்தனையே கொடுத்துயென்
னுளுமானந்தமாக வாழ்விக்கும்
எல்லையில்லாப் பிரணவத்தின் பொருளினை
யிணையிலாநாரணனென்றுவேதம்

32 தன்னில்மிக வுரைப்பதுவே மெய்மையெனச்
சந்ததம் மஹரிஷிகள் வந்தனைசெய்வார்
பின்னமனுகூலமிரண்டை வேறுவேருய்ப்
பிரித்துநமபதம் விரித்துரைக்கும்
என்னுடையதெனும்மகரம் சொல்லுமிதி
வீசனையடைய வழியில்லைநிஜமே
இன்னவுறுமிச்சடத்தை என்னதல்ல
என்றுநமபதமங்குரைசெயலால்

33 வந்தனஞ்செய்நிதம்பரனை யதனுவிதனை
வகுத்தனுகூலமென வழங்கினரே
அந்தமுள்ள திரிதீயபதம் நாராய
ணயவென விரண்டுபதமாகும்
சந்ததம்னிகழுமாத்மா வானதிரள்
தானேநாரமென்ற பொருளாகும்
எந்தனுளுமாத்மகோடி ரட்சணத்தி
விருப்பதயனமென்ற பதங்காட்டும் (தந்த)

---

திருமந்திரப்பிரகரணம் சம்பூரணம்
ஆகப்பிரகரணம் 3-க்கு கண்ணிகள் 132
தேசிகள் திருவடிகளே சரணம்

---

4-வது குணத்திரயப்பிரகரணம்

(அ. கை.) சர்வஜெகத்காரணம் ஸ்ரீமந்நாராயணனுடைய
குணவிகல்பமென்று கூறுகின்றன

தந்தனந் தனதான

34 எக்குணத்தை விரும்பிடுவார் மேலானவர்
யிதையும் பின்னுற்சொலவெண்ணியே நான்
இக்கணத்தி லதைவிடுத்து குணத்தினுறு
மியற்கையை யின்னபடி யெடுத்துரைப்பேன்
முக்குணத்தினுருவான திரி
மூர்த்திபுரு பரமானதொரு
அக்குணத்தை நாரணனுர் தம்முடைய
அவதாரவிபவமென்றுரைத்தாலும்

35 சத்துவத்தின் சுத்தகுணத்தோர் மலர்மக
டன்னூரத்தமர்ந்தவனைத்தான் பரமாய்
நித்தமுந் துதித்திருப்பார் ராசத
நிகழ்குணமாந்தரும் வேதாவைப்
பத்தியாய்ப்பஜிப்பார்கள் தாமதர்
பாம்பணிபரமனை பரிவுடனே
சித்தமதிலேமதித்து ஆனந்தமாய்த்
தேங்கியமடுவிலே சேர்வாரே

36 ஆயினுமவரவருக் குற்றபொரு
ளடைவதிலையமில்லைகண்டிடுமே
தாயினுமன்புடைய நாரணன்
தரும்பதமவரவர் தானுகி
பேயெனுமளவுதன்னில் எவ்வுலகத்
தெவ்வுயிருமவனிடையே யொடுங்கும்
மாயிருஞாலமெல்லாம் நொடியினில்
வருமவன்வயிற்றிடைவுதித்துமிக

37 வெளியிடைாட்சகத்தைச் செயும்போல்
வீயும்பிரளயத்தி லுதாமுள்ளே
அளியொடுவைத்துகந்து ரட்சிக்கை
அவனிடயியர்கை யென்றறிமின்கள்
களவினில் வெண்ணையுண்ட அனந்தரூபக்
கருணையங்கடலையார் கண்டுதேர்வார்
இளநிலாக்கதிரிரண்டும் சரங்களி
லிணையிலாத்திகரிசங் கெனவொளிர

38 தனுகதைவாளியையே அவைமெய்யிற்
றரித்ததுரட்சணத்தின் றன்மையென
அனுபவக்குறியாகக் காட்டியதை
அனைவருமிதிகாசப் தனிலறைவார்
இனிதெனும் னல்வேதத் துச்சிமிசை
இருந்ததையுரைப்பது ஞானமான
மனதினிற்கினிதான கருடனை
வாகனமாய்க்கொண்டதை யறிவிக்கும்

39 திருவொடுனீளைபூமி — தானுகித்
திருத்துமண்டகோடியொருங்காக

நிறைந்துறை சராசரம் — தன்னுள்ளே
நிரந்தரமுறையெயர் வாசுதேவன்

பரந்ததண்பரவைகளும் — சப்தகுல
பருவதமண்டபிண்டமாதியாக

கரந்துறைகாரணத்தால் — சகலலோக
காரணன் பூரணனெனும்வேதம்

40 மந்திரகோடிகட்குள்ளே — ஜீவனை
மந்திரமுன்னுமென்று மறைகளெல்லாம்

சந்ததம் பஜிப்பதற்கே — தேவதேவ
சங்கரனுரைந்தெழுத்தும் சாக்ஷியாமே

சந்திரசூரியர்களொளி — யில்லாத
தனித்தபதத்தைக்கொடுத்தருள்வனென

இந்திராதிதேவர்களும் — புகழ்வதற்கு
இணையிற்கண்டாகருணனிதிற் சாக்ஷி

41 வேதங்களும் தேடித்தேடி — அறிந்திடாது
விளங்குஞ்சோதியென்ற பொருளதனை

ஆதிமூலமெனவுரைத்த — கரிராஜன்
அன்புடனுரைத்த மொழியறிவிக்கும்

சாதிபேதமில்லையென்பதை — அவனிடத்திற்
சாற்றுகைக்குத்தாதியிட முற்பவித்த

நீதிநெறிதவரிடாத — விதுரனில்லின்
நின்றுவோதனத்தையு மன்றுஉகர்ந்தான்

42 எங்கனுமிடங்கவில்லா — திறைபவன்
யிணையிலானாரணனென்பதையே

சங்கையற்ற மறைப்பொருள்க ளுரைப்பதற்கு
தமனியனருளிய சுதன் சாக்ஷி

பொங்கொளிசேர்தேவர்க்கெல்லா மேலவனென்று
போற்றிசெய்யப் பொற்கமலன் சாக்ஷியாமே

தங்கியவன்பர்களுக்குமே — மேலான
தனித்தபதத்தைக்கொடுத்தருள்வனென

43 பங்கமிலாப்படியுகந்து துருவனுக்குப்
பதத்தைமேருவினுச்சிதனிற் கொடுத்தார்
பொங்கியவடியர்தங்களி னெச்சிலையும்
புசிப்பவனென்பதாகப் புகழ்வதற்கு
மங்கையெனுஞ் சபரிபுண்ய வதியவள்
மகிழ்ந்துகடித்துவைத்த கனியுகந்த
செங்கண்நாகணைகிடந்த தேவாதிதேவன்
செயலையெங்கனமுறை செயப்போமோ

44 தக்கதன்மனைவிதனையே சிறையில்வைத்த
தாஷ்டீகதசமுகன்றன்னுடனே
ஒக்கவேபிறந்தவன்றனைக் களைகணெனு
முரையினைநிச்சயிக்க யுலகமதில்
மிக்கவால்மீகமுனி புரைத்தபெரு
மேலானகாவியந் தன்னிலுள்ளே
சிக்கெனவழிவிலாத பதங்கொடுத்த
செயலைவிபீஷணனுமுரைசெயுமே

45 நின்றயுகப்பிரளயத்தில் பிர்மாதிகளை
நிற்கிரகித்தரிக்கின்ற காரணத்தால்
அன்றுலகமுண்டவனையே வேதங்க
ளறையுமரீயென வாகையினால்
குன்றினையோர்கரத்தெடுத்து யாயரைகாமன்
கொல்லவிட்ட கல்வருடமதைத்தடுக்க
மன்றலந்துளவமணிந்த வன்னவனதை
மகிதலத்தேழ்தினமவையேந்தி

46 கோக்களைக்காத்ததாலே அவன்றனைக்
கோவிந்தனுமெனனக் கூறுவரே
சூக்குமதேகமுடையா னென்பதை
சுருதிகள் வாமனமூர்த்தியெனும்
வாக்கொடுபுலனைந்து மடக்கிய
வாய்மையில் மதுசூதனனென்பார்
காக்கவுமளித்துதிக்கச் செய்யும்
காரணமறிவகைகண்டு கொள்வீர் (தந்த)

குணத்திரயப்பிரகரணம் சம்பூரணம்

ஆகப்பிரகரணம் 4-க்கு கண்ணிகள் 184

தேசிகன் திருவடிகளே சரணம்

5-வது முத்தொழிற் பிரகரணம்.

(அ. கை.) சர்வஜெகத்காரணமான ஸ்ரீமந்நாராயணன் தன்னிடத்திலுண்டான சுத்த சாத்விகம் விண்டுவாயும் சுத்த ராசதம் பிர்மாவாயும் சுத்த தாமதம் ருத்திரனாகவும் முத்தொழிலான சிருஷ்டி திதி சம்மாரங்களை நடத்துவதாக கூறுகின்றன

(தந்தனந் தனதான)

47 பங்கயத்தோனவனாகி ஜகத்துள்ள
பல்லுயிர்தசப் பிரசாபதிக்கும்

சங்கையற்ற காலத்திற்கும் அன்னவன்
தானேயந்தரியாமி யாயிருந்து

பொங்குராசதகுணத்தால் இந்தப்
புவிபல்லுயிர்களைச் சிருஷ்டிசெய்வார்

அங்குமவன் விஷ்ணுவாதி ரூபமதில்
இணையிலாப்புவியாள்மனுவினுள்ளே

48 நீதிமிகு சாஸ்த்திரத்தைக் கொண்டுமிக
நிலைநிற்கதருமகாலத்திற்கும்

பூதங்களைந்தினுள்ளே யந்தரித்துப்
புரியுமரட்சணைசுத்த சாத்விகம்

பாதிமதிசடையில்வைத்த சிவனாகிப்
பாசமதைக்கைகொண்ட யமனுக்கும்

சோதியுறுமக்கினுக்கும் ஜலமுதற்
சொல்லிய பூதங்களைந்தினுள்ளே

49 அந்தரியாமியாயும் நின்றுசங்
கரித்தலும் தாமதகுணமென்பார்

சந்ததம்முத்தொழிலாக நாரணன்
றானேகேவலலீலை புரிந்திடுவார்

இந்தமுத்தொழிலொன்றில் எங்ஙனம்
இறத்தல்புரிவதும் கொலைபலவோ

அந்தமுமாதியாக ஜெகத்தவ
னுயிருப்பதினுற் கொலையலவே

50 நிர்விகாரணனென்றால் அவன்றனே
நிச்சியிப்பதெங்கன நிகழ்த்திமிடுவீர்
சர்வேசரூபத்துக்கு நமக்குள்ள
சகலவிகாரங்களற்றதிறற்
றற்பிர்மரூபமான வன்னவன்
தானேநிர்விகாரனுகாதோசொல்
பரியாயநாமங்களும் அவனுக்குற்ற
படியேத்யுடம்பிலே சிலந்தியுமே

51 அண்டாயினுதற்குள்ள துற்குண
மொக்கவியாபிக்குமதுபோலக்
கண்டிடும்பரிநாமம் அந்தக்
காரணமதுபோலப்பூரணனே
அண்டாதொழிந்திடுமோ இதையும்
ஆரறிவாரவன் மாய்கைதனைக்
கொண்டேயிதைப்புரிவார் ஆயினும்
கோதிலாசிருஷ்டிக்கையாவதென்ன (தந்த)

முத்தொழிற் பிரகரணம் சம்பூரணம்
ஆகப்பிரகரணம் 5-க்கு கண்ணிகள் 204.
தேசிகன் திருவடிகளே சரணம்

---

6-வது சித்து அசித்து ஈஸ்பரப்பிரகரணம்.

(அவதாரிகை) ஸ்ரீமந்நாராயணன்தானே சர்வ கோடியண்டங்களாயும் சர்வகோடி ஜீவவர்க்கங்களாகவும் பரிணமித்து சர்வத்தையும்விட்டு அகலாது அந்தரியாமியாயிருந்தும் தன்னைத்தானுணருகிறுரென்றும் கூறுகின்றன.

(தந்தனந் தனதான)

52 பரமெனுமாத்மாவில் ஜகத்தெல்லாம்
பலவிதமாக்கிய ஜீவாத்மா
ஒருபொருளாகுமிவையே சித்தென
வோதும் வேதாந்தங்களுள்ளதெல்லாம்
வருமந்தச்சித்திலசித்து அந்த
வகைப்பொருளின்னதென்று வகுத்துரைப்பேன்
பொருலெனுஞ்சித்ததுவே ஆத்மாவெனப்
புகழுமீதுண்டன விலையெனவும்

53 உரைப்பதற்கில்லையெனவே லயத்தொடு
வுற்பத்திசுகதுக்கமிதற்கில்லையே
சிறப்பொடுவிலக்ஷணபுத்தி ஆனந்தரூப
சிந்தையுமசிந்தையனுவாகியுமே
நிரந்தரவவயவசடம் நிர்விகார
நேரில்லவ்வியர்த்த ஞானஸ்ரயமாய்
பிறப்பிறப்பிரண்டுடைய சேதனரைப்
பேணுவது சித்துவென்றயாத்மாவே

54 இப்படியுண்டானசித்திலே அசித்ததுவும்
எங்ஙனமுண்டாயது சொலுவீரே
ஒப்பிலாத்தேகாதிகளிலே சித்தெனும் பொரு
ளுறைவதுனுமாத்மாவதிலே
எப்படியிருப்பதென்றலோ தேகாதிகளி
லிருந்தும் மறைந்தும் போவததினலே
அப்படியின் சித்தைமறைகள் அசித்தெனவே
அறிவிக்குமதன் செயலறைவேனே

55 சித்தானவாத்மரூப சம்பந்தமான
தேகாதிவிலக்ஷணந்தெரிவிப்பேன்
இத்தைஞானசூன்யமெனவும் விகாரரூப
மிதிலறுவகையாகமையுமென
சுத்தசத்வசத்வமிசிர சத்துவத்தின்
சூனியமெனவும்மூன்றுவகைப்படுமே
ஒத்துயிதைப்பொருள்படுத்த முக்குணமென
வோதுவர்மஹாரிஷிகளுள்ளபடியே

56 சத்துவத்தின் சுத்தகுணத்தால் மெஞ்ஞானமது
தானேயுண்டாகும்போதிச்ஜெகத்தை
நித்யமாயுள்ளதல்ல எனவதுவும்
நிச்சியிக்கும் குணத்தினைப்பெற்றுயிருக்கும்
வித்யாசமிதற்குற்ற தென்னவிந்த
விஜயசப்தாதிகளுண்டானதினல்
தத்துவசரீரமாகவும் பரிணமிக்க
தானேபின்னமதற்குண்டாச்சு

57 நசித்திடுமானமிசிர சத்துவத்தில்
ராசததாமதசாந்தமிதில்
விசித்திரப்பிரகிருதி அவித்தையொடு
விளங்குமாயைமூன்றுதிக்குமிதை
அசித்தின்விசேஷமெனவே மஹாரிஷிக
ளுரைவதுமெதனாலெனக்கேற்பீர்
நிசித்தவிகாரங்களைத்தான் பிறப்பிக்கும்
நேர்மையின்பிரகிருதியுமாச்சு

58 ஞானவிரோதியென்றார் அவித்தையை
நலமிகுசிருஷ்டியைமாயையென்றார்
ஆணையிம்மூன்றினுள்ளே ஐம்புலனு
மைம்பொறிகருமேந்திரியம்முடனே
வானமொடுநீர்நிலந்தீயும் வாயுவொடு
வந்தமனம்புத்திசித்தி அகங்காரந்
தானப்பிரகிருதியி னுதிக்குமென
சந்ததம்வேதாந்தங்களறைவதினால்

59 சருவஜெகத்காரணனென்ற நாரணன்
தானேயசித்தெனப்பரிணமித்து
கருவெனவுண்டுசெய்தா ரண்டமெனக்
காணவதனிடையிலே நான்முகனைப்
வருவெனவுண்டாக்கும் திதிலய
முற்றகாரணபூதனையிப்படி
இருபத்தினாலுமாய தத்துவத்தி
லீசன்பலவுருவாய்ப்பரிணமித்த

60 தன்னையிவன்தெரிந்தாரா தேக
சர்வேந்திரியங்களைத்தந்தனரே
அன்னவன்ரட்சணைதான் இப்புவியி
லாவதுகருமமேதறைவாயே
என்னவிதுகேள்கனாற்றாய் அவனால்
யிழைத்தசிருஷ்டியெனும் டமிருக்கு
மன்னிய நீர்நிலைபோல் அதைதவிட்டு
மாறுதந்தரியாமியாயி[illegible]த்தல்

61 ஆயினுஞ்சங்கரிக்கச் செய்வது
அந்தமுடனுரைசெய்யுஞ் சிந்தைமகிழ்
சேயிடைகுற்றங்காண அவன்பிதா
சிறையொப்பவிலங்கிட்டுவைப்பதுபோல்
மாயிருஞாலந்தனிலே விஜயத்தில்
வளருங்கரணங்களைக்கொலைப்பதுவே
போயிதுயென்னசெய்கை சிலரைப்
போகத்திலும் துக்கத்திலும்வைப்பதேனோ

62 கருணையங்கடலான இவனுக்கது
காரியமாகுமோகழறிடுவீர்
ஒருமனதாய்க்கேளும் தாய்தனக்
குற்றகுழவிமண்தின்றாக்கால்
குறியிட்டு நாவினிடம்வைப் பதுபோல்
கொள்ளும்யிதையிதகாரியமே
திருவளர்மார்பகத்தான் றன்னைச்
சேருமடியவர்கள்தெரிவதென்ன (தந்தன)

சித்து அசித்து ஈஸ்பரப்பிரகரணம் சம்பூரணம்
ஆகப்பிரகாணம் 6-க்கு கண்ணிகள் 248.
தேசிகன் திருவடிகளே சரணம்



7-வது அர்த்தபஞ்சகப்பிரகரணம்.

(அ. கை.) இதில் பரப்பிர்மமான ஸ்ரீமந்நாராயணன் தானே ஆத்ம சொரூபம் ஐந்துக்கும் பகவத் சொரூபம் ஐந்தாக விளங்கி சேதனகோடிகளை வுஜ்ஜீவிக்கச்செய்கிறார் என்று சொல்லுகின்றன

(தந்தனந்தனதான தனதன)

63 ஆதியானசோதியுருவம் முணருகைக்கு
அர்த்தபஞ்சகத்தையறிவிப்பேன்
ஏதமில்ஸ்வயம்பரமாம் யுபாய
யென்னும்புருடார்த்த விரோதிரூபம்
வோதியதிலொவ்வொன்றிலே ஐந்தைந்தாக
யுறபத்தியாகுமெனவுரைத்தனர்கான்
காதலுறுமில்ஸ்வரூபம் அதனுள்ளே
கண்டிடுமாத்மசொரூபந்தான்

64 முத்தர்பத்தர்நித்தரான கேவலர்
முமுட்சின்வஸ்வரூபம் பரத்வரூபம்
வித்தகவியூகம்விபவம் அந்தரியா
மித்துவமச்சாவதாரம் புருடார்த்தம்.
இத்தைநாம்தேடிக்கொள்ள வேண்டிய
தென்பதினாற்புருடார்த்தமென்றார்
அத்தமிகுதானநாமம் ஆத்மா
வனுபவம்பகவதனுபவங்கள்

65 இதைச்சிலர்ஞன்கென்பார் மோட்ச
மென்றவொருதிரவியமிரண்டாச்சு
நிதம்செய்யவேண்டுமுபாயம் அதுவெது
நியமித்த கருமக்கியானபத்தி
விதம்பிரமானபத்தி ஆசாரியை
வேண்டுமபிமதமிவையிரண்டும்
நிதியுமற்றோர்யோகம் என்றனர்
நிச்சியவிரோதிரூபமைந்தான

66 வகைஸ்வபரபுருஷ யுபாயபகை
வகுத்தனரிந்தவிதம் மஹரிஷிகள்
துகையிருபத்தியந்திலே வோரேர்
சுகலக்ஷணஞ்சொலும் முப்புரமெரியாய்

(1-வது ஸ்வரூபத்தில் நித்தியர் இன்னரென்பது)

நகைத்தவன்மால்பிர்மா இவர்களென்
னளும் நித்தியரென நவின்றிடுவார்

(2-வது முத்தர் இன்னரென்பது)

மிகைத்திட்டபிரகிருதி கழித்துமே
மேலானஸ்வரூபமைந்து குணத்தில்

67 ஈடுபட்டுண்டானரசத்தின் பிரீதியுள்
ளிருந்திடாதேவாயாற் புகழ்ந்ததிலே
பாடுபட்டுபலனடைந்து வைகுந்த
பதத்தினிலே களித்தானந்தம்
மூடியஜனகஜனந்த சனத
முனிவராயினோரிவர் முத்தராவார்

(3-வது பத்தர் இன்னாரென்பது.)

நீடுமனித்தியமான சுகதுக்க
நிவர்த்தியிலனுபவமென்றெண்ணி

68 ஆத்மவிஷ்லேசமதைச் செய்ய
வருகரல்லாதுவிபரீதக்யான

காத்திரமேமேற்கொண்டு சப்தாதிகள்
கருதுவாவ்விசைய போஜனமம்

மாத்திரம்தேகசுகமே அவர்கள்
மகிழ்புருடார்த்தங்களெனமதித்து

தோத்தரிபார்விசையலாபம் இதிலே
தொல்வருணாச்சிரம மாரியேதான்

69 பரபொருள்பரதார கமனமும்
பண்ணிஜீவவதைபலபுரிந்து

ஒருசுத்தவாகார விவேகத்தை
ஓராதுசிசித்தத்தையுட்கொண்டு

விரியுமிவ்வுலகயின்ப மிதிலதி
விருப்பமுள்ளவர் பத்தராவாரே

(4-வது கேவலரின்னாரென்பது.)

கருதுங்கேவலரென்பா ரிவர்தான்
கைவல்யபதவியைக்காண்பவர்கள்

70 இங்கிவர்கள் தன்செயலை நன்றாக
எடுத்துரைப்பேனதையின்னபடிநான்

கங்குல்பகலில்லாது பட்சண
கனிஷ்டசிலேஷ்டங்களில்லாது

அங்கமதானவுடம்பை ஜீவித்து
அதில்பிரபன்னராவதுபோல்

தங்கள்சம்சாரமான அந்தக்
தாவாக்கினியாலேயகப்பட்டதாய்

71 எனவினைநிவர்த்திசெய்ய மோகனா
லெவையுமாராய்ந்தறிந்தான

வினையுறுமஞ்ஞான மாயுதித்த
விபரீதக்கியானப்பிரகிருதி

தனியுருமாத்மாவே பரம்பொருள்
தானேயம்மயமானமெட்டவெளியை

மனதினிலெப்படியே அனுசந்த
மாக்கிமுன்பட்டதுக்கநிவர்த்தியென

72 அந்தமிகுமாத்மாவே பரம்பொரு
ளதுவென்றும்சுயம்பிரகாசமென்றும்

பந்தமில்ஸ்வசுகியாய் நித்திய
பதமும்பிராகிருதமாயிருக்கும்

இந்தவிசும்பானவண்டம் இதனிடம்
யிருக்குமாகாசமதுயெனத்தானே

வந்தபிரகிருதிபிண்டம் எனச்சொல்லி
வாயாரயாத்மவிவேகம்பண்ணி

73 இவ்வற்பரசத்தாலே கால்தவரி
இருந்துமுழுநலமானதொரு

அவ்வாத்மாபரமாத்மா எனமிக
அரியாதுயாத்மாவேபரனென்று

செவ்வியபமூர்தவெள்ளம் அதில்வந்து
தேங்கியயாத்மபிராப்திக்கு

நவ்வியஞானயோக நிஷ்டையை
நாடியாத்மசுகம்புருஷார்த்தம்

74 ஆகயிவன்ருனினைந்து இவனுடைய
அந்தம்சம்சாரசுகம்தானுமற்று

ஏகபரமாத்மாவின் பிராப்திய
தில்லாமலற்றுயர்வதாத்மபாவம்

லோகயிகபரமிரண்டி லடைகில
ரோடுவாரசரீரியாகவுந்தான்

ஏகித்திரியுமென்பார் ரிவர்கள்முன்
னிசைத்தகேவலர்களாவாரே

(5-வது மூமுட்சுக்களின்னுரென்பது)

75 பேரின்பவெள்ளமான மோட்சப்
பிராப்திமுமூட்சுக்களாதரிப்பார்

ஆரின்பமானபாக மதிவிரன்
டாகும்பிரபன்னருபாசகரும்

வேறென்னவறைவதுகாண் அந்த
விதமெனக்குரைத்தியேல்நலமென்னே

காருண்யமானவஸ்துவை ஐந்துவிதம்
கருதியுபாசனைபுரிவர்களே

(பரத்வரூபம் ஐந்துவகையெனல்)

76 அந்தமில்பரமபதத்தி லவாக்கிய
மாகியசோதியினவ்வுருவுக்கு

விந்தையானவாசுதேவ மூர்த்தியாம்
வியூகம்சிருஷ்டிதிதிசம்மாரம்

எந்தைபெபரரியரனும் மலருறை
யிறைவனும்விபவங்கள்தன்னாலே

சுந்தரராமகிருஷ்ண வவதாரம்
சொல்லொணப்பலவகையந்தரியாமி

77 எவ்வுலகத்தெவ்வகையான யுயிர்தொறு
மிருப்பதச்சாவதாரமெங்ஙனேயெனில்

அவ்வவர்கடமக்கிசைந்த கோவில்கொள்
அழகியவிக்கிரகத்தேயமால்

ஒவ்வொருவர்க்கேற்றபடி பிம்பமதி
யுகந்துபரமபதம் கருணையொடு

திவ்வியமங்கலமனோ கரமான
தேஜோமயானந்த மானவனே

(புருஷார்த்த ரூபம் ஐந்துவகையெனல்)

78 நன்மார்க்கமானவழியில் பிராணிகளை
நாடோறும் ரட்சணைபுரிவதற்கு

துன்மார்க்கவழிவிலக்கி பொருடனைத்
தூயவழிதேடி வினியோகம்செய்து

சொன்னேக்குமுள்ளவறிவார் தங்களைச்
சோரவிடாதேயில்வாழ்நடத்தி

விண்ணுக்கும் வழிதேடிக் கொள்ள
வேண்டும்நமது செயலதுதானே

79 ஏகமானகாமமதுவும் நலமுள்ள
இரண்டென வொன்றதுவேயிக

லோகசாதனமென்பார் மற்றொன்று
லோகத்தைவிட்டு பரலோகசாதனம்

ஆகுமதிரண்டையுமே அந்தந்த
அடைவுள்ளமாந்தர்களடைவாரே

போகத்தைவிளக்கியாத்மா புத்தி
பொருந்திடவனுபவ மாமதுவே

80 சித்துடையயனுபவமே யேதெனில்
தேவாதிதேவனைப்பஜிப்பதுவே

பத்தியாயிதுதனைத்தான் நித்திய
பாரதந்திரமெனப்பகர்வாரே

எத்தனைபதங்களுண்டோ அதனத
னின்பமனுபவித்துவது நீங்கி

முத்தானோர் சற்கரிக்க சசீலா
முதலவன்பதம் பெற்றுய்வாரே

(உபாயஸ்வரூபம் ஐந்துவகையெனல்)

81 நித்தியம் பிராதகாலம் ஓரை
நிகழ்வதன்முன்னரெழுந்திருந்து

பத்தியாய்க்கைகூப்பித் திருவரங்கம்
பரமன்திருக்கச்சி திருமலைவாழ்

வித்தகன் விளையாட்டெல்லாம் வேதங்கள்
வெளியிட்டபரமாசாரியரைச்

சித்தமகிழ்வுறப்பஜித்து அவரருளும்
திருப்பள்ளி திருப்பாவை சேவித்தபின்

82 வேதம்விதித்தபடியே செயப்பெரும்
விதமுள்ளபலவகையனுஷ்டானம்

ஏதமற்றில்லாதுமுடித்து அதன்மேல்
வினியநீர்படிந்துமடியாக

நீதமுள்ள தசமிரண்டு திருமண்
நெத்திமுதலானதலந் தனிலணிந்து

ஆதியஞ்சோதியுருவா மச்சுத
அனந்தகோவிந்தனுமத்தால்

83 ஆசமனீயஞ்செய்து அச்சாவதார
வனகன் திருவாராதனைமுற்றி

நேசமுடன் ஜபதபங்கள் முதலான
நியமம்வருணசிர தருமமெல்லாம்

வாசுதேவப்பிரீதியாக போஜன
வகையுள்ளபக்ஷணமருந்தியபின்

ஈசனைக்கரங்கள்குவிப்பாய் விஜையத்தி
விச்சைதவர்த்திடுவதுவே கருமம்

84 கருமயோகங்களையே இந்தவிதம்
கசடறநடத்துவதாலதிலே

பரம்பொருளாத்மாவெனுஞ் செயலைப்
பற்றியஞானத்தையுண்டுசெய்யும்

விரிவுறுமிந்தஞானம் இருதய
விடமதைக்கொண்டுநிலைநின்றிடுமே

ஒருபொருளில்லையிதற்கு நிகரென
யோதும்வேதாந்தங்களுள்ளதெல்லாம்

85 இரவிதன்மண்டலமே முதலாய
விடமதிலமர்சர்வேஸ்பரனும்

கருணையங்கடலான அக்கமழக்
கண்ணன்கழலிணைகள் தஞ்சமல்லால்

ஒருபொருளில்லையெனவே வேதங்க
ளுரைக்குந்தாரகமானவனேன்றன்

அரியெனுமசுரனுறம் பிளந்தவ
னழகியமதலைக்கருளியவன்

86 விஜையமதாக்கிவைக்கும் சாரங்க
வில்கதைவாள்சங்கு சக்கரமும்

திசையொளிவிசும்பெங்குங் கேயூர
சிரமகுடபீதாம்பரகுண்டலம்

சசியிரவிகளில்லாப் பிரகாசம்
தானேயாகியண்டத்தப்பாலே
நிசியில்சிரொளியப்ரா க்ருதமான
நேரிலாக்காரணவைகுண்டத்திலே

87 நித்தியமுத்தர்களோடு விஸ்வச்சேன
நேரிலாக்ககபதிதொழவனந்த
வித்தகவிமானமீதிலே நீளையொடு
விளங்கும்பூமிதேவியடிவருட
பக்தியொடுபாகவதர் மங்கலமான
பல்லாண்டிசைத்திடத்திருமகளா
ரொத்துரத்தமர்ந்திடவே நித்தியனை
யொப்பிலாவாசுதேவனிடத்தமர்த்தும்

88 இசைத்ததிப்படியான பல்கோடியண்டத்
தெட்டாதப்பாலனந்தபிரகாச
அசைவில்லதானசீர்த்தி யுயர்வற்
வச்சுதமானவாசுதேவனுறை
விசும்பொளிர்பரமபத மதனிடம்
வீற்றிருக்கஞானமதுகாட்டுமதுவே
நிஜபத்தியோகமார்க்கம் அதனை
நிருத்துங்கியானமினிப்பத்தியோகம்

89 தாரையின்தயிலம்போல ஆத்தும
தாரகமானவனையேத்திநிதம்
வாருதிசூழுலகவின்ப மானபல
மாயையுள்ளதெல்லவுமாரியதிலே
வூரியவமிர்தவெள்ளம் கரைபுரண்
டோடிடப்பரம்பொருளீசனையே
நேரிலாமனத்தமைத்து கலங்கிடாத
நிஷ்டையிலிருப்பதுவே பத்தியோகம்

90 பத்தியின்சாதனையா லாவதந்தப்
பரபுருஷோத்தும நாமமதைத்
நித்தியந்துதிப்பதுவே வேறுள்ள
நியமனமதிற்சொற்ற தேவர்களை

சித்தமதுதனிநினைந்து அவ்வழியிற்
சேர்ந்துபின்னுற் ஜகதீசன்பர

வஸ்துவெனக்கண்டுகொள்வதே இந்த
மார்க்கம்பிரபத்தியாகுமென்றார்

91 ஞானயோகமுற்றபோதே தேசிகனை
நாடிப்பரத்வநிலைதெறிந்துயவே

பேணிநிதம் தொண்டுசெய்து அவருல்
பெருவதுதிருயந்தரார்த்தங்களே

வானவர்கறியலாகா நாரணன்
மஹிமையெல்லாமகிலறிவிக்கும்

ஆனதினுலவையுரைத்த பரமகிரு
பாசாரிமீதபிமதம்வைப்பாய்

(விரோதிஸ்வரூபம் ஐந்து வகையெனல்)

92 தத்துவத்திலுண்டான இந்தச்
சடத்தினிற்காதாரமானதொரு

நித்தியனுத்பாவென தேகசுகம்
நிச்சியமென்றெண்ணுவது ஸ்வரூபம்

சத்துவத்தின்குணமான சர்வேஸ்பரன்
தாமோதரனென்றவரோராது

பத்தியைவிஜயபோகம் தனில்விட்டு
பலதேவருக்குப்பலிமிகவேண்டி

93 மென்மேலும்செய்வதாக பிரார்த்தனை
வேண்டியதன்விரதம்கொண்டாடி

அன்பினேடுபூஜைகள்செய்து இவ்விதத்தி
லாதறிப்பதப்பகைபரஸ்வரூபம்

எம்பெருமான்ரட்சணைக்காக செய்திட்ட
பிணையில்பல்லவதாரமனிதரிட

தன்மையெனப்புத்திபண்ணி வேதவிதி
தனக்குவிரோதினுல்வழிநின்று

94 தருமார்த்தகாமமுடனே மோட்சு
சாதனமானதர்மம்கைவிட்டு

வருகைவல்யத்துவித்யால் சொன்ன
வகைநன்றுதீதென்றெண்ணுது

அருவுருவானவாத்மா பரமென்று
அடைகுவரிவர்புருடார்த்தபகையே

ஒருபொருளருவமதாய்த் தன்னுள்ளே
வுணரும்பகையவ்வுபாயரூபம்

95 தேகசம்பந்தபிராப்த பந்தமதைத்
தேடியநுதாபசூனியமுடனே

நாகமிசைதுயில்வானை யடையவழி
நன்றாகக்காட்டுமாசாரியனை

டாகவிருபேரைநெஞ்சில் அலட்சிய
மாகநினைவதுவப்பிராத்தபகையே

ஆகயிந்தவகையுள்ள அர்த்தபஞ்சக
மறிந்தவர்தாம்பிரபன்னர்களே

96 சம்சாரதுக்கமதினு மொட்டியுமொட்டார்
தாகவதில்மெலிவுபடாவகையால்

அன்பாகப்பானையுண்ணி வருணமென்ற
வாச்சிரமதருமத்தைத்தழுவிநிதம்

இம்மானிலத்திலடையும் சுகங்களை
எளிதிலடைந்துபரலோகமெனு

மம்மானிலத்திலெய்து ஆனந்தபோக
மடைவர்பிரபின்னர்களாவாரே (தந்தனம்)

அர்த்தபஞ்சகப்பிரகரணம் சம்பூரணம்.

ஆகப்பிரகரணம் 7-க்கு கண்ணிகள் 384.

தேசிகன் திருவடிகளே சரணம்.

---

## 8-வது ஸ்ரீ வசனபூஷணப்பிரகரணம்.

(அவதாரிகை) விராட்பிர்ம்மான ஸ்ரீமந்நாராயணன் சேதனரை உஜ்ஜீவிக்க விபவாவதாரமான ராமகிருஷ்ணா பரமாம்சமான ரகஸ்யார்த்தமின்னதென அறிவிக்கின்றன.

(தந்தனந்தன தான)

97 வேதாந்தம் விதித்ததனை — முன்னம்
விவரித்ததன்றியின்ன முரைப்பேனே
நாதாந்தப்பொருளதனை — சுருதியொடு
நவிலும்புராணமிதிகாசமென
பாதானயிந்தமூன்றுஞ் — சுருதிகளில்
பகுப்பதுபூருவத்தின்பாகமென
ஆதாரமானபலவாம் — புராணமிதி
காசமிரண்டுங்கடைப்பாகமென்றார்

98 இதிகாசபுராணமான — இந்த
இரண்டையும் முன்னேனுமெடுத்துரைப்பேன்
நீதிபோன்றவிதிகாசம் — இரண்டென
நிச்சயித்தபாரதராமகதை
அதிலதிசிலாக்யமான — ராமயாண
மறைவதுமுடிவானபொருளேதெனில்
பதிலங்கை சிறையிருந்து — ஜனகியம்மை
பாரதந்திரியத்தைவெளியிட்டாள்

99 பாரதந்திரியமென்று — லென்னவது
பரத்தையடையுந் தந்திரமென்றார்
ஆரிதையறியவல்லா — ரெனனினைந்
தப்பொருளவதாரமாகவேதான்
வாரிசூழ்புவியாழும் — தசரத
வள்ளல்தனக்கு ராகவனானார்
மார்பகத்துறைமலர்மான் — மிதிலைநகர்
வாழும்ஜனகனன் மகளானார்

100. வந்தவதரித்தவகைதான் — இந்த
மண்ணிடைசேதனர் தெரிந்துயவே
வந்தியிலுலகுதந்தான் — தனைப்பெரு
மொன்பதுவிதசம்பந்தமதில்
தந்தையீஸ்பரனைப் — புத்திரன்
தானுமடியனென்பதறிவிக்க
முந்தியுரைசெய்வதன்முன்னம் — ஈரேழ்
முடியுமாண்டுவனமேகினதே

101 அரசன்பிரசையென்ற பொருளினை
அறிவிக்கத் தண்டக வனமதிலே
இரிஷிகட் கபயஸ்த்தம் தந்தந்த
ராவணனைக் கொன்ற தறிவிக்கும்
ஒருபதி பாரி யுடையா னென்பதை
வுணர்த்த சூர்ப்பனகைக் காகவந்த
கரதூஷணாதியரைக் கொன்றவள்
காதும் மூக்கு நகி லறுத்ததுவே

102 ஈசன் பதத்தை யடைய சேதனர்
இறைநிலையின்னதெனக் கண்டுக்கொள்ள
கேசவாத் பரமெனவே ராமசங்
கீர்த்தனம் செய்து பஜிப்பதைக்காட்ட
மாசிலா மலர்மகள் தான் ஜனகியென
வந்து யரக்கன்வைத்த சிறைநடுவில்
பேசிய மொழிகளெல்லாம் ரட்சகத்தைப்
பெருவதின் சாரமதைக் காட்டினளே

103 ஜானகிக்கி நமைப்போலப் பாசபந்தம்
தடைபட்டதெதுவதைச் சாற்றுவீரே
ஈனமுற்றகுணமுடைய ராவணன்
யிசைத்த வசைமொழி யசோகவனம்
எனதை விரிக்கவேணும் ராமகதை
இனிதெனுஞ்சுந்தரகாண்டத்திலறையும்
வானவருக்காகவேண்டி தாடகைமுதல்
வல்லரக்கரோடு தசமுகன் கிளையும்

104 கொன்றதந்தரட்சகத்துவம் இந்தக்
குவலைய மறிந்திடக் காட்டினரே
அன்றுயவன் ஆதுசென்றது ரட்சகமென
அறிவிக்கும் பாரதகதை தன்னிலே
என்றுமவன் றுணைநமக்கு என்பதனை
இகதெனத் துரௌபதையாற் காட்டினரே
கன்றுகளை மேய்த்ததுவும் அவனுடைய
காருண்யமான செயல் கண்டிடுமே

105 அன்பருக்கெளியவனென உற்றபொரு
ளறிவிக்கு மைவரிடம் கண்டுகொள்வீர்
இன்மைக்கு மறுமைக்குமவன் என்பதறி
இணையில் கோசலைநகர் வாசியருல்
கொம்மைதன மாதரான கோபியரின்பம்
கொள்ளவவ ரில்கமீடாறுங் கூடினரே
எம்பெருமான் மாயமாகச் செயும்லீலை
எந்தனறிவினிலளவிட வல்லதோ

106 பங்கயனன் பதத்தாலே கல்லுருவையும்
பாவையுருவாக்கிய தகலிகைசொல்லும்
செங்கமல மலர்மானை யுகந்தமைத்த
செயலது ரட்சகத்வ மாமதுவே
திங்கள்மர புதித்தவைவர் தங்களுக்கு
தேரூர்ந்து சாரதியாய்க் காட்டினது
சங்கையறப்பத்தவச்சல னென்றமொழி
சாதிக்க னின்ற தந்தத் திருநாமம்

107 மானத்தைத்தன் மானமெனவே காட்டவம்
மங்கைதுரோபதையவள் போதாதோ
ஆனதன் னடியவரை தான் புத்திரனென
வாதரித்தபடி மாருதிசாட்சி
ஈனமான ஜாதிபேதம் அவனுக்கில்லை
என்பதையறிய விதுரன்சாட்சி
கானகத்திற் சவுரிதந்த எச்சிலையுங்
கண்டுகந்து பதந்தருங் கரிவரதன்

108 வாமன மூர்த்தியாகி மண்விண்
வளர் திருவிக்கிரமன் திருவடியை
தாமலரோன் றுலக்கியனற் றீர்த்தமதை
மங்கைபாகன் சிரத்தி லமைத்தபலமும்
காமனைப்பயின்றவன்றனன் பாயலான
கட்செவியைக் கன்னிவய துடைய வந்தச்
சோமனைச்சடையில் தரித்த வுமாபதி
சுந்தரமாய்க்கழுத்தி லணிந்தபலமும்

109 தாரகமானராம மந்திரத்தைத்
தன்னுடைய நாவினிடம் வைத்தபலமும்
பாரினைக்கபிலர்தாங்க தேவரிடம்
பசுபதி யாகவரம் பெற்றபலமும்
வாருதிதனைக்கடைந்தோன் முப்புரத்துள்ள
மருந்துக் கிணத்தைப் பசுவாயருந்த
தாரணிபுபத்துமூவர் கொள்கையதைச்
சர்வேசன் பௌத்தனாய் கொலைத்திடவே

110 வரத்தை மிகவுங்கொண்ட முப்புரத்தான
வரைச்சிவன் கனல்விளிப்படித்தினரே
திருத்தியேவுலகமெல்லாம் பிர்மாதியர்
செயலெல்லா மவனாயிருப்பதினல்
அருத்தியாய்னிரைந்தெங்கும் எவ்வுயிர்தொரு
மந்திரியாமியாயிருந்தவன்றன்
கருத்தையாரறியவல்லா ரந்தரம்புவி
காலனலயம்பரி பூரணனே

111 உரத்தினிற்றிருவைவைத்து வலப்புரத்
துமையிடப்பாகனு முந்திமலரை
நிரைத்தவ சுடையானை அண்டகோடி
நிருமித்த நாரணப் பரம்பொருளை
விரித்துரைப்பதுவெங்கே வேதங்கள்
விளக்கிடாதுயவன் மகிமைகளை
கருத்தெனக்கெட்டிடுமோ அன்னவன்
கமலபதத்தைக் கருதிடுவீரே

112 சங்கரன்றன்னைந்தெழுத்தும் சண்முகதேவன்
தன்னுடைய வாறெழுத்து மந்திரத்தும்
பங்கயமா லெட்டெழுத்தி னென்றுகப்
பணித்தபிரணவத்தி னோரெழுத்தை
பொங்குமைந்துமாறுமான மந்திரத்தில்
பொருந்தக்கூட்டி யுச்சரியுமென
வங்கமெனுங் கடலுலகில் ஆகமவிதி
வகுத்த திஷ்டாந்தரம் போதாதோ

113 சாஸ்த்திரத்திலொன்றான சோதிடம்
தள்ளிவிரவிசேய் குகனாணும்

பாக்கியம்பாதியான சைலராஜன்
பண்பினுறும் புதல்வியைத் திங்களெனவே

நேத்தியான சசிமகனை சர்வலோக
நியந்தாவான திருமாலென்று

வத்தும்படியாயுள்ள விவர்களை
இசைத்தவாண் பெண்ணலியென்றனரே

114 தனித்தனியாண்பெண்ணான சொன்னாலது
தகுமா வப்பரன்புத னலியாமே

இனியொன்று வுண்டதிலே குருவெள்ளி
இரவி யிவர்கள்பகற் பலன்தருவார்

சனிதரை மகனிந்து இவர்களும்
தனித்தயிரவிற்பலன் தருவரென

பனிமதிமகன் புதனும் எக்காலமும்
பரிவுடன் பலன்களைத் தருவரென

115 பேடியெனுமுருவுதன்னில் ஆண்பெண்
பெருமிதமா யமரும் பிரபலமாய்

நாடியிதை தெரிந்திடுவீர் நீங்கள்
நயந்துரைனூலையெங்க னுரைத்திடுவீர்

பாடுவது பகவஸ்த்துதி யாயினும்
பதமின்னதெனக்கருத் துணரலன்றி

ஆடுமானந்தமெங்கே எக்காலமு
மன்புடன் ரட்சிக்குமவன் நாரணனே (தந்தனம்)

ஸ்ரீ வசனபூஷணப்பிரகரணம் சம்பூரணம்.

ஆகப்பிரகரணம் 8-க்கு கண்ணிகள் 460.

தேசிகன் திருவடிகளே சரணம்,

## 9-வது சர்மஸ்லோகப்பிரகரணம்.

(அவதாரிகை) சர்வலோகநாயகனுன் ஸ்ரீமந்நாராயணனைச் சேதநகோடிகளடையும் உபாயம் இன்னதெனக் கூறுகின்றனர்.

(தந்தனந்தன தான)

116 சொன்னரெண்டு பிரமானம் ஸ்மிருதிகள்
தொகுத்துரைத்திட விலையோதானே

இன்னமொன்றுரைசெய்வேன் பாரதம்
இசைத்த பிரளயத்தி லுலகமெல்லாம்

தன்னையவன் வயிற்றுள்வைத்து காத்ததைச்
சங்கரன் மார்க்கண்டனுக்குச் சாற்றினரே

கன்னலான பாரதத்திலே கோபியர்துகில்
கவர்ந்து லீலைபுரி காரி வாதன்

117 பண்ணுமொழிக்கீதைதன்னிலே தேகாபிமானம்
பற்றியபற்குணனுக்கு நிற்குணமாய்

சொன்னநற்பொருளையெல்லாம் சுருக்கியே
சொல்லுவன் சுவேதவாகனகேளும்

இன்னலுறும் பாவமெல்லாம் கடாக்ஷமான
என்னுடைய கிருபை நல்வசனங்களால்

பின்னமா மிதுநிஜமே எனது ரூபம்
பேர்களுங்கணக்கிடா தாயினுமே

118 கருமவிதிகளெவையும் செய்துபின்
களித்துயெனது திருத்தாள்களையே

ஒருவனென்றெனைப்பற்று யப்படியானல்
யுன்னையென்னுள்ளாக்கிடாவிரோதியான

அறுவித குணங்களையும் பந்தபாச
மகற்றி நசிப்பித்தென் மோட்சசுகம்

விரவினிலளித்திடுவேன் என்றுபின்
விரிவாயெடுத்துரைக்க நினைந்தன்று

119 குன்றினையேந்தியவள்ளல் விஜயனுக்கு
கூறிடுவாராசையொன்று மில்லாது

என்றனைநினைந்திட்டாக்கால் விரோதிகளை
இல்லாமற்போக்கி யின்பந்தருவேன்

என்றுஞ்சித்தானயாத்மா பாதந்திர
னென்பதையுந்தனுக்கு நான் விரிப்பேனே

நன்றெனுமிந் திரியத்தை யனுசரித்து
நானேபல வவஸ்த்தையா யிருப்பேன்

120 பத்திபிர பத்தியென்றும் பிராணிகட்கு
பலனியமத்தையே கொடுப்பதுதான்

வுத்தம யுபாயரூபம் ஐந்திவற்றை
வுணர்வது பெருபயனடைந்திடவே

எத்திசையு மெவ்வுயிருக்கும் மேலாக
இருக்குமபரம் கிருஷ்ணனக வந்து

வித்துரும மொத்தவதா சுமித்திரையாள்
விரும்பும் பற்குணனுக்கு யிவைதெறிய

121 செப்பின ரிம்மொழியை மனமுவந்து
செவ்வியமதாமெனக் கேட்டுவந்தனனே

முப்பொருள் ரகசியத்தை முன்னுள்ளோர்
மொழிந்திட்ட தாற்பரிய விதமதிலே

ஒப்பிலாத்திருமந்திரம் சர்மஸ்லோக
முரைத்தனனினித் வயமியம்புவள்கேள்

கற்பனையுபாயவிதியும் வுபேயமான
காரியபிரார்த்தனையாயிருக்கும் (தந்தனம்)

9-வது சர்மஸ்லோகப்பிரகரணம் சம்பூரணம்.

ஆகப்பிரகாணம் 9-க்கு கண்ணிகள் 484.

தேசிகன் திருவடிகளே சரணம்.

10-வது த்வயப்பிரகரணம்.

(அவதாரிகை) விக்கிரகவாராதனையில் சர்வாபீஷ்டமும் வுண்டெனக்கூறுகின்றன.

(தந்தனந்தன தான)

122 நித்தியம் பஜிக்குமான பக்தருக்கு
நேரிலாத்வயம் பிரதானமாகும்
உத்திரவாக்யமூன்று பதம்கடசி
யுயர்ந்த பூர்வபாகம் மூன்றெனுமே
இத்தையும் முன்னோர்மூன்று பதமென
இசைத்து மூற்பாகத்தை விரித்துரெண்டா
மத்தையுமவ்விதமாக யுரைத்தனர்
அதையும் தெரிந்தளவிலறைவேனே

123 இருபதமெனச்சொன்ன தென்னவது
இருபத்தியைந் தெழுத்து மாகுமிதில்
ஒருபதமேழுமெட்டாம் பூர்வமிது
ஒன்பதோடொன்று முத்திரபாகம்
பெருமது நாலுபதமாம் அதில் தசப்
பிரிவுள்ளவர்த்தங்களாய் நிகழும்
சருவனை ஸ்ரீயாம் மன்னெனச்
சாற்றும் நாராயண சரணௌவென

124 சுகமுளசரணம்பிர பத்தியெனச்
சுந்தர ஸ்ரீமதெயெனச் சொல்லியதிலே
அகிலனாராயணனும் ஆயவென்ற
அந்தமுள்ள நவமொடுதசமாகும்
மகிதலம்தன்னிலே ஸ்ரீ எம்பெரு
மானைமறக்காவன்பு புரியுமென
திகழ்பிராட்டியாபுருட காரமதைச்
செப்பியமன்னித்திய யோகமதே

125 நாராயணன் பதத்தால் சேதனரிட
நலங்கிளர்குணங்களையேபுருடா
காரமான திருமகளார் தனக்குயர்வை
காட்டிரட்சணைபுரி வாரெனவே

சாரமுள்ள சரணௌவென ரட்சணத்தின்
றன்மையுள்ள விக்கிரகவிலக்ஷணம்சொல்

தாரகமான சரணம் விக்கிரகம்
தன்னுலு யாயவிதி கூறினரே

126 ஆனயந்தப்பிரபத்தியே யுபாயபாவ
மருள்செயுமதிகாரியவஸியத்தை

வேணுமெனச்சொல்லுமதனல் ஸ்ரீமதே
விரும்புங் கைங்கரிய வவசியத்தை

தீனதயாளனை நாராயணத்
தெய்வமே சர்வமுந் தானென்னும்

வானவரானேர்க்குப்பரம் ஆயபதம்
வயங்குந்திருவடியை யனுஷ்டித்தல்

127 குற்றமிகுவகங்கார நிவர்த்திகளைக்
கூறிடுமே நமபதந்தன்னலே

வுற்றவிந்தத்வயந்தனிலே வாக்கியமென
வுரைப்பது ரூபகுணநிச்சியமே

பெற்றவாசார்யருசி சிறப்பதுவும்
பெருவது தாற்பரியபதவருத்தம்

நற்றுணையாங்கைங்கர்ய சித்திகளை
நாட்டினர் பிரதான வருத்தமென

128 அனுசந்த மானவருத்தம் சுபாவமுள்ள
அனுஷ்டானவிதிகளைக் கூறியிடுமே

முனிவருமற்றுமுள்ள மஹரிஷிகள்
முறைமையால் நடத்திய விதிகளைத்தான்

இனிதுளவாழ்வார்க ளிதனையே
யேத்திப்பரம்பரையாயனுஷ்டித்து

கனகணையுரம்பிளந்த நெடியவன்
கமலபதத்தைப்பெற்றுமனமுவந்தார் (தந்தனம்)

10-வது த்வயப்பிரகரணம் சம்பூரணம்.

ஆகப்பிரகரணம் 10-க்கு கண்ணிகள் 512.

தேசிகன் திருவடிகளே சரணம்.

## 11-வது ராமாயண தத்துவவிளக்கப்பிரகரணம்.

(அவதாரிகை) ராமாயண சாரம் ஆத்யந்தம் தேகாதி தத்து
வார்த்தங்களெனக்கூறுகின்றன.

(தந்தனந்தன தானு)

129 செங்கமலமங்கைமார்பிற் றங்கிவளர்
திவ்யனாராயணதேசோன் மயனும்

அங்கண்மாநிலத்திலுற்ற சேதனங்க
ளடையும் பிரார்த்தமருள் செய்திடவே

சங்கையற்ற வவதாரம் பலவியற்ற
தரையிற்புரிந்ததிற் றயதானற்

றுங்கனருள் புதல்வனென ஆத்மபரன்
துலங்கியதத்துவத்தைச் சொலக்கேளும்

130 கோசலைனன்னாடுசூழும் அயோத்தியதை
குறிப்பிடும் பரமபதமெனவே

ஈசன்றயதரவள்ளல் கோசலையாள்
எிண்ணிலாத்தேவிபூ மகள்பூமின்

நேசமுள்ளசுபத்திரையாள் கைகேசி
நீளையெனும் பெண்ணமிர்தம் ஸ்ரீராமன்

மாசகனுமாத்மரூபம் அவ்வியந்தம்
மற்றுமுள்ள பாவியயெவ்வர்ணங்களே

131 சிரவணச்செயல்களெல்லாம் வதிஷ்டமுனி
செய்யமனமதுவிசுவாமித்திரன்

திரமுள்ளவைராக்ய மானதம்பி
சென்றுகடந்தவனம் பருவதங்கள்

வருமெனும் பஞ்சமகா பாதகங்கள்
யோட்டி யாத்மமது பரமாத்மா

அருள்நிறைஞானமான பாணமதில்
ஆவரணத்தாடகை தனைமாட்டி

132 இச்சையென்ற மாரீசன் றன்னைமுன்
னென்னெதிரில் வரக்கெடு மெனவோட்டி

அச்சமுள்ள விபசார மானகல்லை
அகற்றெனப் பதமலரால் மிதித்து

பச்சமுறுமாகார மானதொரு
பதமல ரகலிகை யெனத்துதித்து

அச்சுதயேகாந்தமான பொருளது
அணிமிகு மிதுலையம் மானகமே

133 சாந்தமென்ற மாருதியே குணமிகுந்த
சனகன் பொருமையக் கார்முகமே

போந்தவா னந்தமென்னும் ஜானகியின்
பொற்கரம் பிடித்தமத மென்னவுரைசெய்

காந்தலெழுங்கண்ணனை பரசுராமன்
கடிகியே கி[illegible]மென மதமகற்றி

போந்திடவயோத்தியான பரம்பதனி
பொலிவுறு சீவன் றனல்லவென்று

134 தசரதப்பிர்மமதையே வந்துகூட
சகலவைபவ மகிடம்புனைய

அசவில்லா சீவாத்மா நாடியிட
ஆனகிரிகையெனுங் கைகேசி

நிசியெனும் சலனமுள்ள ஏவலது
நிருபனான பிர்ம தயரதனை

வசைமொழியான வரத்தால் பிரித்திட
மானகரமான மோட்சம் துறந்து

135 மெத்தவைராக்யமான இளையவள்ளல்
மென்மலராளாநந்தத் துடன்கூடி

சித்தமெனுஞ் சரயுநதி தாவிமெல்ல
சீராணபுத்தியென்ற குகனடுத்து

வித்தகவிச் சேடமென்ற கானகத்தை
விலகிச் சித்திரகூடம் தவமடுத்து

அத்திரமொன்றதனாலே அகங்கார
மானவிராதன்றனை யூனமேசெய்து

இத்தகையோ மயமென்ற வசுரகாகத்
திருவிளியின் சங்கல்ப்பமானதொன்றை

136 போக்கினர் நிருவிகல்ப கன்னதனைப்
புரிந்தனர் தமிழ்முனி வீரமென்ன
வாக்கினர் தீரமென்ற சரங்களை
அடைந்து காமமென்ற சூர்பனகை
மூக்கொடு செவிதுணித்து தூடணகரன்
முரடன் திரிசிர காமியமகற்றி
நீக்கிடா விச்சையென்ற மாரீசனுல்
நிலையுறு மானந்த மாந்தேவி

137 பிரித்துராசதகுணமாம் ராவணன்
பேணியானந்த ஜானகியடுத்து
விரித்துசெய் யின்பமென்ற புரிலங்கா
மேவியசுபவாசனை யரக்கர்
உருத்து மொய்த்திடவெண்ணும் மானதொரு
வூனமில் லசோகவன மாமதிலே
இருத்திட வாத்மராமன் ஆனபரன்
இச்சையென்ற மாரீசன் றனையோட்டி

138 அந்தமில் னிராசையென்ற பூமியின்கண்
யாக்கியெங்குமில்லாது போக்கியபின்
விந்தையென்ற மைதுலியாம் ஆனந்தமது
மேவிய விடங்காணு தாத்மபரன்
நொந்துவைராக்யமென்ற இளையனெடு
நொய்தெனவயர்ந்துவி கோபமோப
சிந்தனையாம் கானிலலைந்து கவந்தன்விழ
சீக்கிரம் துலைத்துச் சந்தோசமெனும்

139 ஒப்பிலாச் சபரிபுண்ய வதியின்பா
லுற்று நித்யாசன வனுமானை
மெய்ப்படி கூடியானந்த மானவன்தன்
விபர முறைத்தருளி ஜனனமென்ற
சப்ததருக்களைக்கொய்து பயமதான
சத்துருவாலியைக்கொன்ற பயமெனும்
செப்புமரி மைந்தனைக்காத்து சுபவாசனை
சூழும் குரங்கினினங்களை சேர்த்து

140 நித்யாசனங்களென்ற மாருதியை
நேமித்து மோகமென்ற சாகரத்தை
வித்தகன் சடக்கத்தாண்டி லோபமெனும்
வீரமுள்ள விலங்கனி வீட்டியபின்
சுத்தியில்லா வசுபவாச வசுரரை
தொலைத்து வானந்தமென்ற ஜானகியை
அத்தினத்திற் கண்டுகளித்து வுல்லாசமென்ற
அனுபூதி மேற்கொண்ட சோகவன

141 ஆனபெண்ணத்தைப்போக்கி அஞ்ஞானமுன்
அடையும் சுமாலியவன் றனைகிழித்து
ஈனமுள்ளசந்தேக மென்றதான
யிணையிலா வச்சயன்றனைதொலைத்து
வானவர்கோன் பகைஞனை விபரீத
மானமயக்கமென்ற பாசமனு
மானதிலடைங்கிராசத குணமெனும்
மதியிலா தசக்ரீவன்றனையடுத்து

142 அக்கினியெனும் மௌனத்தால் லங்கைநக
ரழிந்துமோகனவா ருதிதாண்டி
சிக்கெனவுரைத்தபின்னுலே சேதுவணை
செய்யசாத்மீக விபூடணனை
தக்கபடி யடிமைகொண்டு கும்பகருண
தாமதகுணத்தைவெட்டித் தலைசாய்த்து
மிக்கராசதராவணன் தனை யதட்டி
விபரீத யிந்திரசயத்தைமுட்டி

143 மட்டில்லாப்பாசமான மயக்கமதை
மாட்டவைராக்கியமா மனுஜன்
திட்டமிகு மாருதியாம் நித்யாசனன்
தினந்தினமானந்த மடைந்திருக்க
நிஷ்டையென்ற சஞ்சீவி கொடுத்திட
நேரிலா வைராக்கியமான பெருமாள்
முட்டிவிபரீதக்ஞான இந்திரஜித்தை
முடித்துச்சஞ்ஜீதமென்ற மூலபலம்

144 வந்திடத்திரமென்ற மோகனகணே
வாட்டிவதைசெய வரக்கரெல்லாம்

சிந்திடச்சுபவாசனையாம் வானரங்கள்
சிறந்திடவசுப் வாசனரையெலாம்

சிந்திக்கு மாத்மராமன் ராசதமெனும்
தெசமுகன் றனைக்கெடுத் தருளவே தான்

விந்தையுள்ளகெம்பீர கோதண்டமதை
விரலிலெடுத்துஞான விசிகமதால்

145 தேகமென்ற கவசமதைச் சிந்தத்துப்பின்
தெசவிந்திரியமென்ற சிரந்துணித்து

யோகவானந்தமென்ற ஜானகிதனே
யுற்றுமௌனக்கினி தனிவிட்டு

வேகமுடன் விண்டுபிர்ம மானதந்தை
மேவவானந்தத்திருவினைக்கூடி

நாகநகரொப்பிலாத வயோத்தியெனும்
நற்பதியிலாத்ம ராமன்புகுந்து

146 செப்பரிய மறவென்னும் மகுடாபி
சேகமதை கொண்டபிர்ம தயாதனே

ஒப்பிலாமோட்சமெனும் அயோத்திக்கி
யுரியனைக் கேவலர்களொடு

இப்புவியிலுள்ளபலரைத் திருத்திடவே
எம்பெருமான் றன்சுய வடிவான

அப்புமுதற்றத்துவமெலாம் சொரூபமாக
அடவி லுலகினற்குக் காட்டினரே

147 இந்தவிதம் பரமாத்மா தனிலுதித்த
யிணையில் சீவன் பலவுருவான

அந்தரணன்றுனே பரமென
யறியாது யாத்மா பரனென்று

வந்தனையிலானந்தம் எந்தவிதம்
வந்ததனை யுரைசெயுஞ் சைலதாசன்

அந்தமுடனுரைத்ததெல்லாம் தெளியவுங்கள்
ளகத்தில் மதித்துக்கதி யடைவீரே

11-வது ஸ்ரீமத்ராமாயண தத்துவவிளக்கப்பிரகரணம் சம்பூரணம்
ஆகப்பிரகரணம் 11-க்கு கண்ணிகள் 589.
தேசிகன் திருவடிகளே சரணம்.

---

## 12-வது வைதீகத்திருவாராதனைப் பிரகரணம்.

(அவதாரிகை) வேதங்களில் பிரதிபாதிக்கப்பட்ட ஸ்ரீமந் நாராயணனைக்குறித்து சொல்லப்பட்ட வைதீகதிருவாராதனையே மிக விஷேடமென்பதாகக்கூறுகின்றனர்.

(தந்தனந்தன தானு)

148 திருவுரத்தினிலமைத்த நாராயணன்
திருவாராதனை ஜெகதலத்து
அரிதுவிஷேடமென்னவே இகபர
மனைத்தையுந் தந்துசுக மளிக்குமென
இருபதமெனச்சொலந்த வச்சுத
னிணையிலாப் பரமமாம் பதமெனவே
அருமறைப்பிரமாணம் பலவுண்டு
வதையிங்கனுரைப்பதைக் கேண்மின்கள்

149 எண்ணிய ருக்குவேதம் இரண்டென
இசைத்தவட்டக வத்தியாயத்திலே
நண்ணயவர்க்கமைய்யைந் தாகவுமே
நலம்புனை நாராயணனை
புண்ணியன்றனக்குவப்பாய்ச் செய்திடும்
பூசனைமிக விஷேடமென்ன
திண்ணம தாயுரைக்கும் அதற்கிசை
திரமிகு பல புராணமுள

150 பூவுரைமறையவனைய் யுந்தியினிற்
பொலியச்செய்நா ராயணன்றனையே
மேவிச்செய்பூசனைதான் வைதீக
மென்னவுந்தாந்திரீக மென்னவுமே
காவிநேர் விழியானை யுரத்துயர்
கரியவன் வைதீக விதிமறையாம்
தாவுதாந்ரீகமது பஞ்சராத்த
தகைமையுடைய பூஷனையென்னும்

151 கேவலமுக்தி சாதனம் தாந்திரீகம்
கேடில்முமுட்சுபடி வைதீகம்
பாமகள் கணவனிடர் தீர்த்தருள்
பரமன்மச்சயமெனப் பரிந்து சொற்ற
தாமெனும் புராணமதிலே வைதீகமுறை
தகுமெனத் தெளியுறச் சாற்றுநல்ல
ஆமைபுராணத்துபரி பாகமதி
லருளும் வியாதகீதை தன்னிலுமே

152 பாருளோர் மதிக்கவத்தி யாயமது
பத்துயெட்டானசொற் பிரமாணம்
சிரியவாராதனங்களின் கிரமமதைச்
செப்பியவிடங்க டொருந்திருமகளும்
எருறுதிகப்பரனும் நான்முகத்
திறைவனுமிடமதா யுரைகின்ற
நாரணன்றிருவாராதனே விஷேடமான
நவையிலா வைதீக மெனவுரைக்கும்

153 அந்தமுள்ளவைதீக பூஷணையின்
அடைவுளதற்கு நிகரொன்றுமிலே
முந்திய வாராதனேயின் ஆதரவின்
முறைமயாம் பூஷணேசெயும்போது
பந்தமிலவ்விண்டுவினிட பரமமான
பதமெனப்பகருவ ததுவன்றி
மந்திரபுருடசூத்தம் பென்றிரண்டு
வாய்த்த மந்திர மிரண்டாகுமதே

154 உயர்மறைஞன்கினிலே இரண்டினிற்கு
யொத்த மந்திரம் வேறிலே யெனவே
அயர்விலம்மந்திரத்தாலே அவன்றனே
அகண்டபரி பூரணனெனுமனந்த
சயனனுக்காத்மாவின் சமர்ப்பணஞ்
சார்ஜனன மரணத் தொடுபலவாம்
துயரெலாம் தீர்த்துமிக நித்யானந்த
சொரூபமாய் விளங்கு வாரெனவே

155 நற்பரம வாசுதேவ நாமமது
நாரணன் பரமமாய் பதந்தனிலே
அற்புதவியூகம் விபவம் தன்னினொடு
அந்தரியாமித்துவ மச்சாவதாரம்
சொற்பெருமப்பிம்மமதிலே வாசுதேவன்
தொகையைந்துவிதமா மதுதனிலே
பொற்புடைய புருடாகார வாராதனை
புலப்பட வுகந்ததைப் புகல்வேனே

156 அண்டகோடிகளுக்குள்ளே அப்புறமும்
மாகி யகண்ட பரி பூரணமாய்
எண்டகு வாசுதேவ நாமமதை
யிருத்தியெங்கு நிறைவாகவதில்
தண்டலில்லாபலவண்டங் களுக்கெல்லாம்
தானுயர் பரமமாபதம் தன்னிலே
கண்டுநித்ய சூரியர்கள் தியானமாக
காட்சியாராதனை கைகொள்ளுவார்

157 மற்றனுவகை தன்னிலே வியூகமது
வாசுதேவ சங்கருட பிரித்யூமனன்
பெற்றவநருத்தப் பெயராம் இந்தவிதம்
பெயர்பெரு மூர்த்திகளாயிருந்து
நற்றவயோகியரோடு ஜனகாதிகள்
நால்வரொடு நித்தியமுத்தர்களாலே
உற்றிடுமுபாசனையை யுகந்தருளு
முயர்வற வுயர்ந்தவம்மாதவனே

158 நவனுமத்திருமால்தான் விளங்கிய
நெடியவனனுக்கிரகார்த்தமதாய்
அவதரித்தருள்வதற்கு மீனமுத
லாகும்பல்லவதார வைபவத்தில்
பவமறும் பிரகலாத நாரதாதி
பரவுபுண்டரீக பராசரனும்
தவவியாசம்பரீடன் சீர்பெரும்
சௌனகனுயர் பார்த்தன் விதுரன்

159 ஓங்குமவ்வதிஷ்டமுனி வீடுமன்
னுயர்சுக வீடணனுமுருக்கு

மாங்கதன் முதலாய பாகவதர்
மன்னிடுங்காரணமாம் ஜென்மப்

பாங்கினர் தேவர்தம்மால் ஞானத்தைப்
படைத்துவாழ்ந்திடு தபோதனருலே

பூங்கடல்மிக விளங்கச்சு ழிந்தனர்
புவனமேற்ப் பூசனைதனைக் கொள்வார்

160 தருமதுகிற்கத்திருவாய் பிர்மாதியர்
சகலதேவாதிசதுர்வித பலமாய்

அகடித ஜீவகோடி களுக்குள்ளே
அந்தரியாமியாயிருந்துலகில்

மகிமையுள சுகப்பிர்ம ரிஷிகளான
மற்றுமுள்ள வாமதேவ ஜனகனொடு

திகழ்வுறுயோகியராலும் மவன்றன்
திருந்துமாராதனை தினம்விரும்பும்

161 செப்புமவ்வுலகிலுபரும் ஸ்ரீதரன்றன்
சேதன சேதனமானதெல்லாம்

மெய்ப்புவியதிலீடேற சுயம்புவான
விக்கிரக விண்ணோர் முனிவரர்களுமே

இப்பெரு நரர்களாலும் பதிஷ்டையான
யினியபிம்ப மதிலுகந்தருளி

ஒப்பருந்திருவாராதனை தன்னையவன்
ஒன்றுதச னாராகவுகந்தருளும்

162 உற்றவிந்தமூர்த்தி பஞ்சகம் முரைக்குமந்த
யுயர்பஞ்சராத்திர னூடனிலே

மற்றதற்குதிஷ்டாந்தம் தினகரனை
மகிழ்வொடுமூவேழ் செனனமதில்

குற்றமறப்பஜித்தாக்கால் பசுபதியின்
குணமதுசித்தியாகு மவனையோரேழ்

சொற்றகுஜனனமதிக்க சுருதிகளின்
சுதந்தரமாகு மவனத்துரையில்

163 துதிக்கமுச்சனனமட்டும் மாலினருள்
சொந்தமிவன் றனதெனச் சொலுஞ்சுருதி
மதிக்குநிகராமுத்தவன் றனக்கு நந்தன்
மகனருளியமொழி மகிதலத்தே
பதிக்குனல்லடியிரண்டைத் தன்னுடைய
பங்கயக்கண்சிரமதிலேபதித்து
கதிக்கும்பவத்திலாழ்ந்த எந்தனையும்
கடைத்தேறவருள்புரியெனக்கண்ணன்

164 அருமறை விதியுரைத்து என்பதவி
அகண்டமாயிருக்கு வைபமெனவே
திருவாராதனைவிதியை செவ்வையாகச்
செப்பியிப்படியனுஷ்டிக்கவேதான்
விரும்பினாலெனது நித்ய வானந்தம்
விரவில்னிலைபெரு மெனவுரைத்த
பெருமொழிபாகவதம் ஏகதசம்
பேசிடுமிருபத்தே ழத்தியாயம்

165 ஆரோக்கியமதுதனையே வருக்கனிட
மகல்செல்வ வன்னியிடையறிதான
ஏரேற்றஞானமதனைச் சடையனிட
மெழில்முத்தி விண்டுவிடையினிதாக
சீரேற்ற பாரிலன்பாய் யுள்ளவர்கள்
செறிகின்றதென்னதெளிவாயுரைக்கும்
பேராற்சிறந்த பொருளால் விளங்கிய
பிரமமகப்புராணம் பேசிடுமே

166 நிருபன்ரட்சிக்குமுலகை நேயமுடன்
நிலைகொண்டு தந்தைபுதல்வரைகாக்கும்
நரரைப்புரிந்ததர்மம் காக்குமென
நாளுமவைபோற் சராசரமதனை
பரமுடையவன்வளர்த்தி முத்திதனைப்
பரிவுடனீகுவனெனவிண்டு
தருமத்திலாய்ந்துரைக்கும் இன்னுமுள்ள
தகும்பிரமாணங்களறைந்திடுவேன்

பரமபதவர்ணனை

167 அதிசயப்பிரமாணம் பலவுண்டு
அறிபவர்க்கிங்கனமறைவேன்றுன்
சதுர்விதப்பலன்களையே அன்பருக்கு
தண்டுழாய் முகுந்தன் தருவரென
முதுமொழிவேதபுராண சாஸ்த்திரம்
முறையிடும் பலநூல்களும் விரித்து
யிதமுடனுரைசெய்வதை சிறிதுனன்
யியம்புவன்கேளீர் மனமுவந்து

168 விண்டுவினுலகமதே வுலகினிற்கு
மேலானவுலகம்வேருகவினி
யுண்டெனவுரைப்பதில்லை பரமபத
முயர்பதமெனப்பெயராற் றழைத்து
அண்டரு நித்யசூரியர் மகிழ்வொடு
அறையுமப்பிராகிருத மாகியவை
குண்டமதை மகிமையுள்ள தாகுமென
கூறுவன் பிரமாணங்கள் பலதையுமே

169 பைத்தலையரவிற்றுயிலும் பகவனிட
பரமமாய் மருவியபதம்தானே
எத்தனையுலகினிற்குமே மேலாகி
இருக்குமென்பதனையியல்பாக
மெய்த்தசிறிருக்குவினில் லாதியாக
மொழியுமட்டக மிரண்டாவதெனும்
அத்தியாயத்திலேழாம் வர்க்கமதி
அடைவுடன் கூறுவது வெளியாக

170 ஆயசிறிருக்கிலெட்டா மேழிலங்
தானவத்யாயமான வர்க்கம்
தூயசிறிருபத்தெட்டாய் சிறப்புள
ரேவனவனின்றருளுஞ் சேடமதே
மாயையாமுலகுகளோ டனைத்தையும்
மயக்கியேவகைபுரி மாதவனுர்
மேயசிர் பரமபதம் எனும்பெயர்
விளங்கியதென்பது மிகவுரைக்கும்

171 அந்தமுளவானவெசுரு வேதமிரண்
டாகுங்காண்ட மனுவாகங்கடை
சந்ததம்முக்குணத்தியல்பால் எண்ணியநற்
சரியிலாப்பகுதியை கடந்தாக்கால்
பந்தமாம்பாசப்பற்று அறுத்துமே
பயின்றிடும் பரமஞானியர்தம்
சிந்தையாலயம்செங்கண் மாயவனூர்
சிறந்தசீருலகெனச்செப்புவாரே

172 ஓதியசாமவேத கீதமதி
லுயர்ந்திடு முத்தரவிருக்கதனில்
மேதகுமட்டதசமா மத்தியாயம்
மிகுமிரண்டானவக் காண்டத்திலே
மூதுஞானியர் தங்களின் பவமறுத்து
முத்தரானவர் தங்களுக்குயெலாம்
பாதையாம் விண்டுபதங்கள் தனைப்பெரும்
பரமமாம் பதமெனப் பகருமதே

173 மருவியபஞ்சராத்திரி தன்னிலே
மன்னியபரம்சங்கிதைனூலின்
விரவியவண்டகோள மப்பால்
வெள்ளனீர் வெள்ளனீர்க்கப்பாலே
பரவிய வொளிதானே அப்பாலினிற்
பவனனதற்க்கப்பால் பயில்விசும்பு
கருதிய விசும்புனிற்கு அப்பாற்மிகு
கனமதானவகங்காரமதே

174 புலமையாங்காரமதற் கப்பாலதி
புத்திபுத்திக்குமேலவ்வியத்தம்
அலகிலவ்வியத்தினிற்கு அடுத்தனூ
அந்தமில்லாத தூயறைவதுகேள்
யுலககாரணனாகி அவற்றையெலா
யுண்டுமிழ்தளித்தழித்தளந்தவன்றன்
நிலமைசேர் மகிமையுள்ள வாசுதேவன்
நிரந்தரமுறைபதமென நிகழ்த்தும் (தந்தன)

வைதிக திருவாராதனைப்பிரகரணம் சம்பூரணம்,

ஆகப்பிரகரணம் 12-க்கு கண்ணிகள் (696)

தேசிகன் திருவடிகளே சரணம்.

13 வது வேதவிரோதநூல் வர்கிககண்டனப்பிரகரணம்.

(அ-கை) சதுர்வேதங்களுக்கும் விரோதமாய் ஏற்பட்ட ஆகமங்களில் கூறப்பட்ட சாராம்சமானது ஒன்றுக்கொன்று பேதமுடையதெனக்கூறுகின்றன.

(தத்தனந்தன தான)

175 ஆகமங்களுரைசெய்த சிலவற்றை
யறிவிப்பேனினிதொடு சிருஷ்டி திதி

சாகச்செய்திரோதானம் அனுக்கிரகத்
தன்மையே ஐந்துவிதமயன்மாலும்

மாகமனக்கோபருத்திரன் மயேச்சுரன்
மற்றுமேசதாசிவனென்றவிவர்கள்

ஆகயிந்தப்படிசிவனார் பஞ்சபிர்ம
மதிற்சுத்தமாயை யசுத்தமாயை

176 என்றயிருமாயை தன்னிலே யயன்மால்
இவர்களசுத்தமாம் மாயையென்றும்

நின்றசுத்தமாயைதனிலே ருத்திரனொடு
நேரிலாமயேச்சுர சதாசிவனும்

நன்றெனும் மாயையிலுதித்த இவர்களென்
னாளும்நித்தியரெனநவின்றிடுமே

அன்றுலகமுண்டவனையும் பயன்றனையு
மனித்தியமெனவதிலறிவிக்கும்

177 இவ்விதத்திலாகநூல்க ளுரைப்பதற்கு
ஈரிருமறைகளிடந்தரவில்லை

செவ்வியதாயுள்ளவேதம் தனிலுதித்த
செய்கையென்று வாகமத்தை திருத்தியது

அவ்விதங்களாயிருப்பது வேதப்பொருளை
அனுசரியாததாலதுவியர்த்தம்

எவ்விதமென்றாலதனை ஆகமஞ்சொன்ன
இயல்பினைச்சொல்லுவென் கேட்டிடுவீர்

178 சத்தியஞ்சானமூர்த்தி யென்றபெருஞ்
சவத்தின்மேல் நடித்திடுமெனச்சத்தி
நித்தியவப்பிரமத்திற்கு பேற்றமென
நிகழுந்தோற்றங்களுமொடுக்கமுடன்
மற்றவளிடத்திலெயென்னும் ஜகத்துக்கு
மாதாவும் தாரமு மவளென்னும்
முத்தியையடைபவருக்கு காரணமான
மூலமவளென் மிகவாயுரைக்கும்

லோகாயுதமதம்.

179 உண்டதேயுருதியென்று மாதர்க
ளுற்றகலவியே முத்தியென்றும்
கண்டதே காட்சியென்றும் பரம்பொருளை
கண்ணாலேகண்டதார் வேண்டிச்செய்யும்
எண்டவ விரதமெல்லாம் செய்துமெய்
யிளைக்கவிடுவதென்னமதியிந்த
அண்டத்தினிலுற்றபோகமே தாரகலோ
காயிதமதத்தவர்களின்னியற்கை

சமனமதம்

180 பொங்குநான் முகன்றனையே படைத்திடப்
பூட்டியிப்புவியெலாங் காப்பதற்கு
செங்கண்மாயவன்றனக்கு மிக்கபெருஞ்
செய்கையைவகுத்துச்சிவனார்தமக்கு
பங்கத்தினிற் கேற்றவதமே செய்திடப்
பணித்துக்கருமஞ்சூழ் கற்பமெல்லாம்
தங்கனுபகன்றனை கடந்ததெனச்
சாக்கியசமணர்கள் சாற்றிடுவார்

ஆகமவிதி சைவவாதம்.

181 வையகத்தின் வேதபாகிய ருறைக்குமிந்த
வகைப்பிரமாணங்களுள்ளதெல்லாம்
மெய்யெனக்கொள்ளவேண்டாம் திஷ்டாந்தரம்
விளம்புவ னிவைநிற்க மார்பினிலே
பையராவணிபண்ணவன் பாவைபங்கன்
பசுபதிபகர்ந்திட்டவாகமங்கள்
செய்யமரைப்பொருள்களுக்கு விரோதமின்றி
செப்பினுலல்லவோ பிரமாணமாகும்

182 ஆகமங்கள் சிலவற்றி லாரணம்புகழ்
அகிலகாரணன் ஞாரணனென்னும்
நாகமிசை துயில்வானை அன்றுபரம்
நவிலும்பசுபதியைப்பரம்மென்னும்
லோகசிருஷ்டியாதியான காரியத்தி
லோரொருவர் தமையுண்டாக்கியதால்
மோகனூனுரைத்ததெல்லாம் நலமிகு
முத்தரால் வழிப்படலாகாதென்று

183 சொல்லுஞ் சடையுங் கபாலம் ருத்ராக்கமான
சொன்னசவநீருரகககங்கணமும்
எல்லையில் மகாரபஞ்சகம் மான தீக்ஷை
யிரண்டுமொன்றுமாகச் செப்பியதன்பின்
அல்லலறு சங்கு குண்டலம் நீருகன
மானசிகா மணியுபவீதமுடனே
நல்லதென்ற யிந்தவாறு முத்திரை தனை
நவின்றிலவேதங்களாகையாலே

184 வாமம்வையரவம்கவுளம் புகன்றனல்
வைகாளிகம்சைவகளாமுகமும்
நேமமானவிவையாகமம் யுரைப்பதல்லால்
நின்றமற்றவாகமங்களொன்றுக்கொன்று
ஆமெனவுரைப்பதில்லை பேதாபேதங்க
லகண்டமாய்க்காணுவதிலதிலெதுமெய்
சோமனைத்தரித்தசிவனர் யோனிபீடம்
துலங்கியலிங்கபூசைபுரிவரென

185 தங்கயிந்தப்பூசைதனிலே சுராகும்பஸ்த
தாபனஞ்செய்திடக்கபாலவிரதம்
மிக்கவிதைச்செய்திடுகுவார் ருத்ரதமமான
வேதியரென்னுஞ்சன்யாசியரென்றும்
அக்கராவணிசிவனர் உரைத்தபெரு
ஆகமமோகனூலறைவதல்லால்
தொக்கவேதசுருதியெல்லாம் மிதுதனைச்
சொல்லவில்லையென்பது சத்தியமாமே

186 மச்சியமாங்கமதான முத்திரைதனை
மாகாரத்திலெமற்றுமொன்றுமான
நிச்சியமகாரபஞ்சகம் பதவிக்கு
நிலமையுமுத்தியது நானேயென்று
அச்சிவாலிங்கார்ச்சனையே செய்யும்பொழு
தானந்தமாமதுவினைக்கொண்டு
இச்சையினாலபிஷேகம் செய்யிலது
இரணாறுயாகபலன் தருவரென்றார்

187 இம்முறையிலாசரிப்பவன் மயேச்சுரன்
ஈரிலாவைமுகற்கைம்புலனென்று
நம்மூலக சங்கராசாரி சாரதத்துவம்
நாட்டியநூலினிடம் செய்தமென
செம்மையிலிதனைத்தானே சங்கரனார்
செப்பினார் விருப்பமொடு யோகிகட்கு
அம்முறைகளானவையெலாம் மவைதீக
மானதென்றவச்சிவனார் வாய்மையெல்லாம்

188 சங்கரரே லிங்கமொன்றும் அவற்றிலந்த
லிங்கமரே சங்கமர்களென்றுசொல்லி
பொங்கியவீர சங்கமர்கள் லிங்கபூஜை
புரியும்பொழுதுவாசாரகுரு
தங்களிடபாதம் விளக்கும் நீரதனைத்
தானேலிங்கத்துக்கபிடேகம் செய்தால்
மங்காதகதியடைவா ரென்றுசொல்லும்
வாய்மையனாச்சாரமாகாதோசொல்

189 ஆகமங்களுரைப்பதெல்லா மூலகத்திற்கு
அப்பிரமாணமென்பதறிவிப்பேன்
நீகுறிகொண்டுகேளாய் மலைமகளே
நெற்றியங்கண்ணினானற்றுநோக்கி
பாருகேர் மொழியாய்கேள் விரித்திடும்
பாசுபதாதி சரித்திரமசுர
மோகனமாகச்செய்தேன் இவைகளை
முத்தரால் வழிப்படலாகாதென்றார்

190 ஏயசாஸ்த்திரம் சைவம் பாசுபத
மென்னயிருவகைப்பட்ட தென்றுமிக்க
வாயவைகள் வேதவிருத்தம் ஆசாரங்க
ளணைய பாடண்டரானோர்களுக்கு
தோயறிவதுவிலாத அநந்தமான
துன்மார்க்கப் பாடண்டரிருவிதமே
தூயனல்வரைமகளே இங்ஙனம்
சொல்லுவேன் கேள் நீ மனமுவந்து.

191 சிலமுறுங்கௌதமன்றன் கோபமதிற்
சிலர் சாபமடைந்தவரவரோடு
வாலகில்லியரென்பார் ரிவ்விரண்டு
வகையுள்ளவர்கள் மாலைமதியாரே
மேலுமங்கவர் புண்ய மார்க்க
விரோதியெழில் மறைவிரோதமுள்ள
நூல்களையோதியவர்கள் சந்ததமும்
நொய்யவரோடல்லதினங்காரவரே.

192 அணையதுன்மார்க்கராயுஞ் சாந்தங்க
ளற்றபாசண்டரோடசுரர்கள்
மனிதராயுலகில் வந்து வஞ்சக
மறைந்து தூயவாய்மை வேராகி
அனுதினம் மதுவிரைச்சி நுகர்ந்தவ
ஆகமமோகனவழினின்று
புனித வேதத்தைப் பழித்து அகங்காரப்
புத்தியுன் மத்தராய்த் திரிவாரே.

அவர்களிற் சிலர்தாமே ஆயிழையா
ரன்புறுங் கலாவியே பதமென்று
தவரியேயதில் நிதமும் மயங்குவர்
சைலராஜன்றரும் புதல்வியே கேள்
இவரலாற்சிலபேர்கள் லிங்கத்தி
னிச்சையின் பூசையிலிருமாந்து

புவனமே ளுளுமிக்க வகங்காரப்
புத்தியின் வழிதொழில் புரிந்திடுவார்

193 வேதனூற்றனிலுரைத்த முறைப்படி
வேண்டியெய்தனைத்துதியாரவர்கள்
யோதுமோகனமான வாகமத்தி
லுற்றதுன்மார்க்க வொழுங்காகவேதான்
போதவெனை மகிழ்வித்ததாய் தங்களிட
புத்தியின் வழிதொழில் புரிந்திடுவார்
கோதைய மங்களமான பூசைபதைக்
கொள்வதில்லையென்பது சத்தியமாமே.

194 அத்திரமுடையவர்தாம் செயுந்தவ
மற்பமென்பதைக்காட்டா தவனிமிசை
சித்திையச்சிலதுகாட்டி ஆரணனூல்
செப்பிய யவ்வழி யொழுகாமற் செய்து
புத்தியைக்கெடுத்தவ்வழியே படச்செய்து
புகன்றவாகம மோகனவழியால்
சுத்த சங்காரமூர்த்தியாய் நாமே
தொகுத்தவர் தம்மையுந் தொலைப்பேனே.

195 இவ்விதமான மொழியை நாரணக்கி
இந்துசேகரனெடுத் துரைத்தவெலாஞ்
செவ்விய பௌடகமெனும் புராணமது
செப்புமிறனூறுநாற்பத்திறைவில்
தவ்வரு செஞ்சொலான வத்தியாயந்
தன்னிலே யுரைத்ததைச் சாற்றினனே
இவ்வுலகமறியவுமே யுரைத்திடவு
மிதுவே யின்னமுமுண்டு சொலக்கேளீர்.

196 அந்த மஹாதேவனுந்தான் அகத்திய
ரல்லாவருந்தவமுனிவர்க்கெலாம்

இந்த மானிலத்தோரெல்லாம் விண்டுவை
இச்சித்தெய்தனரானந்தயுலகம்
முந்து சிரந்தரத்தோர் பிரீதியாக
முகுந்தனாதனையை முற்றியதனால்
சுந்தரனுமகனுங்கள் வாழ்ந்திட
சுவர்க்கபதவிபடைந்துகந்தாரே.

197 வனையவுலகினுள்ளோர் யாவரும்
ஏணியின் பலுவிலேரிடுவார்போல்
மோனமாமுனியேகேள் ஆராதனையின்
முகுந்தன் முத்திலோகந்தனையடைந்தார்
ஆனகாலந்தனிலே அதிகாரத்
தவரெல்லா மச்சுதனை நினைந்திடவே
ஞானநயகன்றானும் மத்தேவர்
நயனகோசரமுானின்றனனே.

198 நின்றநாரணதேவன் நீவிரெல்லாந்
நினைந்ததென்னெம்மை யிங்குநிகழ்ந்ததென்லே
மற்றலந்துளவோனே யுலகோர்
வருள் முறைமுத்தியினையடைந்தாக்கால்
துன்றிய தோற்றமொடுக்கம் எப்படியாம்
சுவர்க்கமும் நரகமுமெங்கேயென்றார்
என்றனரென்னத்திகரி சங்கேந்திய
யீசனெனன் முகத்தினைத்தானோக்கி.

199 முந்திய யுகங்கண் மூன்றும் என்றனை
முயன்றுபூசிப்பவர்களிற்கவேதான்
அந்தமில்லாக்கலியுக நான் பரமென
யறியாது யனைவரவ்வண்ணனிற்ப
புந்தியின் மகிழ்வால் சோக னாலினைப்
புரியெனப்பணிக்க வானோர்களுமே
வந்தனைகள் பலவுஞ்செய்ய வருள்மொழியு
மாதவனு மன்னிலைபோய் மறைந்தார்

200 திருவருட்படிசோக வாகமனூல்
செய்தனனந்தனூல் வழியெல்லாம்
இருநிலத்தவர் மறையின் வரம்பினை
இகழ்ந்தனுச்சாரர்களாய் மயங்கி
திரிந்தவர்னிற்பார்கள் வைதிகத்தை
சிறிதுமென்னுமலே யதன்வழியில்
பரிவுறவந்த பசையால் அவர்களுக்குப்
பலிப்பது செனனமாம் பள்ளங்களே.

201 என்றனனிதுகளெல்லாம் வராகமது
இசைத்திடு மெழுபத்தொன்றாய் நிகழும்
நின்றவத்தியாயமதற்கு மேலானவன்
னேறிலாவத்தியாயமது தனிலே
மற்றலங்குழலானுமையை வாமமுறும்
வண்கயிலாயவானவன்றனையே
சென்றடிபணிந்து முனிவர் மோகனநூல்
செய்ததென்றேவனீ செப்புகெனவே. (தந்தனம்.)

வேதவிரோதநூல் வர்க்ககண்டனப்பிரகரணம் சம்பூரணம்.

ஆகப்பிரகரணம் 13-க்கு கண்ணிகள் 804.

தேசிகன் திருவடிகளே சரணம்.



14-வது அப்பிராமணியப்பிரகரணம்.

(அவதாரிகை) பிராமணீகம் குறைந்து பாசண்டி மதம் ஏற்பட்ட தற்கு காரணம் இன்னதெனக்கூறுகின்றன.

(தந்தனந்தன தான)

202 தாவுமான்றனைத்தரித்த செங்கையுடை
சம்புவுந்தபோதனர் தமக்குரைப்பார்
பாவுகார் பொழியாப்பன்னி யிருவருட
பஞ்சகாலத்தில் பசியாலே நொந்து

தேவதாருபவனமே ஆச்சிரமம்
செறிந்துவாழி ரிடிகள் சிலபேர்கள்

கோவை நெல்மிகவிளையும் வயல்வளங்
கொண்டகோதமனுரையுளையடைந்தார்.

203 சதுர்மனா முனிவரிட வரவுகண்டத்
தபோதனனான கோதமன்றானே.

எதிரெழுந்தேகியினிய சொற்கூறி
யான்செய்யுந் தவங்களினின்று நன்றே

அதிசயஞ்சபலமான தென்றவரை
யாச்சிரமந்தன்னிலன்பாயிரித்தி

புதுவிருந்தாகவுந்தானே யுபசரித்துப்
பூசனைநெடிதுனள் புரிந்தானே.

204 போயது பஞ்சகாலம் அவ்வளவிற்
புனிதமாமுனிவர்கள் தங்களிட

தேயம் நன்றுதற்காக இச்சையாய்த்
தீங்குவைத்தகலுவோமெனவெண்ணி

மாயையினலொருவனையே பசுவாக்கி
மாதவன் பயிரழிக்க விடவன்னேன்

ஏயெனுமளவுதன்னிலெ சாவதாக
இப்புவியில் வீழநிந்தை செப்பினரே.

205 செல்லுமவ்வந்தனர்தமையே தடுத்துனீர்
செப்பிடும்பிராய சித்தமெதுவென்ன

புல்லரிப்பசுவினிற்குப் பிராணன்
போனதில்லை கங்கை நீர் தெளித்திட்டால்

மெல்லவெழுந்தெய்திடுமென அந்தமொழி
மேலவனிச்சூதைய னுகூலமென

சொல்லியபடியிற் செய்தார் மாயமான
சுரபியுந் துள்ளியோடிட வதனின்.

206 ஆயதோர் செயலையெல்லாம் தங்களிற்றன்
அந்தர வீதியிலே பேசிடுநற்
. றாயவேழ்முனினகைத்தார் நகைத்த
சூழ்ச்சியேதென்று கோதமனதனை
யேயயோதத்தாலதனை நினைந்தனன்
இருடிகளிழைத்ததோர் மாயையென
தூயவிழிநெரும்பாகச் சிவந்திட
சுழன்றன வுலகங்க ளுள்ளதெல்லாம்

207 இப்படியாய் மாயமிழைத்த விவர்விரத
ஹீனராயிழிதொழிலது புரிந்து
மெய்ப்பொடிகள் பூசிவிரித்த சடைதறித்து
வேதபாகியர்களுமாகிநிதம்
அப்பிராமணிய வேட பாடண்ட
ராகியரிக்கன்புகூர்னெறிதவரி
தப்பியிப்புவியிற்றிரியக் கடவரென
தந்தனன்சாபங்களையே சிந்தைகொதிக்க

208 சாபமிட்ட வகையதனைக் கண்ணுரக்கண்ட
சத்தமாமுனிவ ரிப்படிச்செய்த
பாபகாரியர்களுக்கு கலியுகத்துப்
பலிக்கவிச்சாப மென்றுரைத்தவர்கள்
தீபதூபனறுமலர்கள் சொறிந்துமே
சுரர்மகிழ்ந்திடாதி மகிழ்மதனக்
கோபன்வாழ்கைலை சென்றுர வரவர்
குவித்தகை சிரத்தின் மேற்கொண்டுமிக்க.

209 ஏதுகார்யமஹரிஷிகள் வந்தவா
ரென்னவென்று ஞன்வினவ மற்றவர்களும்
கோதமன்றன் சாபமதனல் சிலரிந்தக்
குவலயமீதினிற் பிறந்துவந்து
பூதியுஞ்சடையுந்தரித்து பாடண்டப்
புலையருய்வருவர்களவர்களுக்கு

பாதகத்து சோகனூலைப் பலபடவே
பண்ணவேனுமென்றவுரை ஞான்கேட்டு.

210 நன்றென சோகனூலுரைத்தேன் அவைகளை
நான்மறைகளோடு விரோதமாகத்
தொன்றெனவைதாளங்காண்டி லங்கவுளம்
தொகுத்த தனிச்சுவேத முதலாய
ஒன்றல பலவுமுறைத்தேன் அவைகளெலா
மொன்றுனூராயிரமாங்கிரந்தம்
அன்றியும் விகர்ப்பமனேக முண்டுரைக்கி
லவையெலாமவைதிகசாரமெனவே.

211 என்றுயவருள்ளம் தெளிய யிப்படியெலா
மிசைத்ததைத் தெளிவாகயோதுநிதம்
சென்றுமாமேருகிரியை வலமாகச்
செப்பும்மாதித்திய பூராணத்தாடே
நன்றுதவம் புரியவல்லீர் ரிதைவிரித்து
நாட்டும்முப்பதான வத்யாயத்திலே
பொன்றிகழ் சுடிகைப்பாந்தல் லேந்துபொற்
புவியின்மேல் வெளிபடப்புகழுமென்பார்.

212 ஆதித்திய புராணந்தன்னிலே விரிவதான
வைந்துமைந்துமான வத்தியாயத்திலே
சோதித்த தனிற்சொற்ற கதையை ஞான்
சொல்லுவேன் கேளுங்கங்காதரனார்
பாதியுடலானவுமையாள் திருவை நிகர்
பங்கையக்கண்ணம்பிகையோர் பாரைமீது
ஓதவரிதான சுந்தர வடிவுமிக்க
ஒப்பில்லாவோரிடைப் பெண்வடிவதாக

213 திரண்டெழு நகிற்சாடி பதித்திரு
தேங்குவெண்ணுரை சுரக்கும்பமென்ன

இரண்டையும் பதித்து மெல்ல தயிர்கடை
இசையென வீலயாற் கடைந்திடவே
மருண்டசிந்தையருக கௌதமன்
வலைபடுசாபத்தை யடைபவர்தாம்
உருண்டநீட்டிசுடவே அவரந்த
வுச்சிவெய்யலில் விடாய்த்தடைந்தாரே.

214 அக்கணந்தன்னிலே வந்த வந்தணர்தமை
அம்மையங்கருள் சுரந்துரைக்கலுற்றாள்
மக்களீருச்சி வெய்யலில் விடாய்த்தனும்
வருத்தமதகல விவ்வக்கிரத்தை
மிக்கதெள்ளமிர்தெனவே யிதுதனை
விருப்பொடு நுகருவீரெனவுரைக்க
ஒக்குமென்றதனையெல்லாம் நுகர்ந்தன
ருள்ளமுன்மத்தர்களானாரே.

215 அந்தவேளையக்கணிபர மானந்த
மாகிய சங்கரமூர்த்தியவரிடத்தில்
வந்துமுன் கௌதமரிஷியின் கொடியசாப
வசத்தருமலரடி பணிந்துனின்று
எந்தையே யெங்களுக்குற்ற பெருஞ்சாப
மென்றுபோமிசைத் தருளெனப்பகர
நந்திவாகனனுந்திரு வருள்மொழி
நயனனுயவர் முகந்தானோக்கி.

216 அங்கவர்கள் தன்பொருட்டினிற் செய்தபெரு
அமங்கல சோகனூல் வர்க்கமெல்லாம்
சங்கையறச் செப்பியருளி யிதனையுங்கள்
சந்ததி பரம்பரையாயனுஷ்டித்து
பங்கமில்லின்னூல்வழியே எந்தனைமிகப்
பற்றியாராதனை பண்ணுவீரென
அங்கையில் நெல்லிக்கனிபோல சொன்னதெல்லா
மந்தமுடனக்கதையிலரைந்திடுமே.

217 மற்றுமோர்கதை கேளாய் கோதமன்சாப
வலைபடுமுனிவரு மாபதியோ
டெற்றைக்குமுள்ள பொருளாய் வயங்கிய
இணையிலா நாரணமூர்த்தியையும்
பற்றியவர் தாள்பணிந்து எங்களுக்குற்ற
பழிப்புள்ள சாபங்க ளகற்றெனவே
நெற்றிவிளியானுமந்த நாரணனோடு
நிகழ்த்துமிவர் புண்ணிய பலன்றனையே.

218 இச்சியாளின்றனரே மிவர்குபாய
மேதென யிந்திரை பதியுரைக்கும்
நச்சமர்களத்தானே இவர்கள் செய்
நல்வினையுற்பமு மில்லையதனால்
துற்செய்கையர்களான இவர்களுக்கு
சொல்லுமோகன நூலென்பதனை
அச்சுதனுரைக்கச்சிவனார் அனேகமான
ஆகமங்களுரைத்துபதேசம் செய்தார்.

219 இசைத்ததைக் கௌதமனார் சாபமுள்ள
விருடிகள் மஹாப்பிரசாதமென
அசதவில்லாமலதையே கைகொண்டு
அன்றுமுதலனுஷ்டித்து வருவதென
வசைத்திரம் யாதுமில்லா கூறுமனும
மருவியமாபுராணமதிலதிக
பசைத்தவச்செஞ்சொல்லான யத்தியாயம்
பத்திெனாடு நான்கினிற் பகருமதே.

(தந்தனந்தன தான).

அப்பிராமணியப்பிரகரணம் சம்பூர்ணம்.

ஆகப்பிரகரணம் 14-க்கு கண்ணிகள் 876.

தேசிகன் திருவடிகளே சரணம்.



## 15-வது மங்கலகுணப்பிரகரணம்.

அவதாரிகை எம்பெருமானுடைய கல்யாணகுணங்களுக்கு அளவில்லையெனக்கூறுகின்றனர்.

(தந்தனந்தன தான)

220 ஆகமங்கள் சிலவற்றில் சிவனுருக்கு
அமைத்த மங்கலகுணமானதெல்லாம்
பாகமுடையதுவல்ல குணங்களெல்லாம்
பசுபதிபகவசப்தார்த்தமென
நாகரீகவரனடியார் செய்கின்ற
நலமுள்ள வந்தனைக்குரியதென்றே
வேகமுள்ள விடையானுக் கீச்சொரியல்
வீரம் சம்பதையொடு கீர்த்திஞானம்.

221 மகிமையுள்ள வைராக்யம் என்னுமிந்த
வகையுள்ள மங்கலகுணமாறும்
தகைமையாங் குணங்களெல்லாம் நக்கனுக்கு
தகுந்ததுவெனச் சொல்லியதனுலே
சகலவீச்சுரசத்தம் அதனுலந்த
சந்தமுள்ள வீச்சொரியம் சாருமென
மிகவுளருத்திரனென்ற சத்தமது
மேலான வீரியத்தை விரித்துரைக்கும்

222 மறுவிலாச் சருவசத்தம் அன்னவனிட
வரம்பிலா ஞானத்தை விரித்துரைக்கும்
கிரமமாம் சிவசத்தம் தன்னுலதி
கீர்த்தியை மிகபடக் கூறுமதால்
விரிவுள்ள காமாரி சத்தமவன்
விளங்கிய வைராக்கியமாமே
அரனிட சிரேஷ்டசத்தம் சம்பதை
யாகுமிந்த வறுவகை குணம் தன்னுல்

223 இன்னனவானசத்தம் சிவனுக்
கிருப்பதினால் பகவானென்றே
கன்னியோர் பாகன்றன்னை எல்லாமுறுங்
கல்யாண குணமுடையோனெனவே
சொன்னவிந்தக்குரைகளெல்லாம் அரனவர்க்கு
சொந்தமல்ல விரவலாபரணமதை
என்னுடைய தெனவணிந்து வீதிகளில்
இன்பமாய்க்குலாவுவது வதுபோல.

224 வுரைசெய்வேனினிக்கேளாய் யுந்தனுக்கு
வுள்ளபடி விரித்துரை செய்வேனே
அரியமாமறை தன்னிலே இந்தவிதம்
அளவிட்டுச்சொல்லவில்லை யதனையே நான்
சுருதி புராணமதிலும் மற்றுமுள்ள
சொற்பிரமாணமதிலுரைத்ததில்லை
கருதுங்கற்பனை தன்னால் விநோதமான
கதைகளைச் சொல்வதுபோல் முடியும்.

225 உரியவின்னமந்தனைக் கொண்டு சில
ருவைமையினாற் பொருள்கூட்டி மிக
விரகினாலுரைப்பதெல்லாம் மெய்யென
விரிவுள்ளவறிஞர்கை கொள்வாரோ
அரிய பௌவுத்தவருகர் இக்குணத்தை
அன்புள்ள தங்கள் தேவருக்குச்சொல்லி
பிரியமாய் பஜிப்பார்கள் அவைதன்னாற்
பேணியதிகமென வெண்ணுவதா.

226 நக்கனைப்பகவானென்றே மோகனனூல்
நாட்டியதைக்கூட்டினீருரைத்தாக்கால்
தக்கவிச்சுரசிவாதி சத்தமெல்லாம்
தாமோதரனன கேசவனுக்கன்றி

ஒக்குமோ மற்றவர் கிதனை முன்னுரைத்த
யுரையெல்லாம் போதாதோ யாயினும் நான்
அக்கதையையிங்கு வுரைத்தால் புலவருக்கு
அடுக்காது யாயினுஞ்சுருக்கிச்சொல்வேன்.

227 கட்டமில்லாவருந்தவத்தோன் மலர்சுடரின்
கதிரின் மெய்யொளிர்கின்ற கண்ணனெனும்
திட்டமிலா ஞானமாயும் வரம்பிலாச்
செய்கையுடையவனெனச்செப்பியதன்பின்
எட்டுனேத்திரன்விடையை யூர்கின்ற
இறைவனுமிந்திரா தியர்கட்கெலாம்
எட்டிடாதவன் குணங்கள் கரைபுரண்
டிருக்குமெனவுரைத்தார்களந்த

228 நாரணமூர்த்திதானே யாதாமொரு
நவையிலாக் குணங்களின்றன்னாலே
பூரணன் என்பதற்கு திஷ்டாந்தரம்
பூராணங்கள் பல மெய்பொருளாலும்
ஆரணமொழியானும் ஜகத்துள்ள
அணைத்திதிகாசங்கடன்னிலே சொல்
ஏரணிபிரமாணம் பலவுண்டு
இசைப்பன் மனமுவந்து கேட்பீரே.

229 உத்தம விருக்குவேதம் இரண்டென
வுபருமட்டகமிரண்டாவதென
அத்தியாயத்துவர்க்கம் சொல்லுமென
அவையிருபத்தினல்திகரிகையில்
வைத்தமால் தன்னுடைய சிறப்புள்ள
மாயன்மங்கல குணமானதெல்லாம்
எத்தனை வானுறுமீனைக் கணக்கிடினும்
இறையரிகுணம்கணக் கிடலாகா.

230 மருக்குலாவிய குழல்மா னுரத்தமர்
மாதவன்மங்கல குணங்களையே
பெருக்கமே தினிமீது பிறந்தவர்
பிறப்பவர் நிற்கின்ற தேவரிட
திருக்கிலாவுளத்தாலே அவரவர்
தேரினுமுடியாதென்னவுமே
இருக்குவேதங்களிலும் வேறுள்ள
யியல்பலனூலினு முரைசெய்புமே.

231 விண்டுவின் பொருளான நலமிகு
வீரியகுணங்களெல்லாமெண்ணிக்
கண்டிடத்துணிவதெல்லாம் பாரினிற்
கழிந்ததுகிள்கணக் கிடமனதில்
கொண்டிடலொக்குமென இதைமிகக்
குறித்தெசுர்வேதத்தினு தியின்கண்
பண்டயகாண்டமிரண் டாகிய
பரிசத்திற்றெளிவுறப் பகருமதே.

232 பாவமும் சிரை துன்பம் எக்காலமும்
பசியுமில்லாதவனென்றுமிகக்
கோவைமங்கலமான குணங்களைக்
கொண்டவனென்றுரைப்பதுவன்றி
தாவுமிக்குணங்களெல்லாம் அச்சுதற்கு
தற்சுபாவத்திலுண்டானதென்ன
மேவுசாவித்தை தன்னிலே அகண்டமென
விண்டுவைப்புகழ்ந்திடு மறிவீரே.

233 கணிதமில் குணங்களெல்லாம் நந்தனருள்
கண்ணனுக்கேயுளதெனவெண்ணித்
துணிபவர் முத்தரென்றே விறிவுள
சுபாலஞேபனிடந் தொடுத்துரைக்கும்

மஙரியெனத்துலங்கியவோர் மேனியுடை
மாயனைப்பகவா னென்று சொல்லி
பணிதிகழ்கின்றகெற்போ யுபனிடம்
பகருமதித்துலகபாடமென்றார்.

234 அகிலகாரணனை நாரணன்
அளவில்குணங்கடந்தவனென்று
மகரவாருதியினுள்ள மணலெல்லாம்
மதிப்பிடவெண்ணினு மதிகமதாய்
திகழுநற்கமலவுந்தி யானவன்
திவ்யகுணங்களா னவையெல்லாம்
தொகையிடற்கரியதென வென்றுமிகச்
சொல்லும்மட்கியமெனமாபுராணம்.

235 செங்கண் மாயவனை அன்னவன்றன்
திருவவதாரத்தினின்றினிட
மங்கலகுணங்களெல்லாம் மறிஞர்கள்
மணல்பளித்திவலைவான் மீன்களையே
இங்கிவைகளெண்ணினு மெண்ணலாம்
இணையில்லாக்கேசவன் குணங்களைத்தான்
சங்கையற்றவரும் பன்னாட் டவமிருந்து
தரையிற்கணக்கிடினு முடியாதென.

236 சத்திரயாகம் செய்யுங் காலமதிற்
காலமுனிவர்கி பேணஞ்செய்பர
வஸ்துவின்னதெனத்தெளிந்து பரிவுடனே
வந்துரைத்த பிருகுவின் வாக்கியங்கள்
பத்துயெனுங்கந்தத்தூடே பாகவதம்
பகருமெண்பத்தின லத்தியாயம்
நத்துதிகிரொளிர்கையான் குணங்கடந்த
நவையுறுபரமெனத் தெரிந்துய்ய.

237 மதுமலருந்தியானை எண்ணிலா
மங்கலகுணங்களாய் மருவியநற்
பதியெனப்போற்றிசெய்த கதையப்
பங்கையத்தோனுரை பகர்ந்தமையை
பதுமமெனும்புராணம் ஐந்தாற்
பத்துனுலென்றவத்தி யாயத்திலே
இதுவாயின்னமுமந்த மாயனுக்கு
இசைத்தமங்கலகுண மளவுண்டோ.

238 திவ்யகுணங்களாரின் திரத்தினை
தெரிந்துவிரித்திங்கே யுரைத்தாக்கால்
அவ்வகைக்குணங்களெல்லாம் மிக்கபெரு
பச்சுதனேயவனன்றி வேறில்லை
மெய்வழிஞானமாயும் சத்தியம்
மேன்மைகீர்த்தியீச்சொரியமுடன்
செவ்விய வீரங்களுஞ் சம்பதை
திருமால் தனக்குள தென்றனரே.

239 அனைத்துலகத்திலுள்ளோ ரனேகமான
ஆயிரங்களான கோடி காலமெல்லாம்
நினைத்திருந்தெண்ணிலும் திரைமிகுத்த
னீள்கடற்றுயிலுமெம்பெருமான்றன்
கனத்தமங்கலமான குணங்களைக்
கணக்கிடலாகாதெனத் தெளிவாய்
பனைக்கொடியுடையோனுந் தருமனுக்குப்
பகர்ந்தது பாரத கதையுரைக்கும்.

240 புருடனென்கின்ற பேரும் பொருந்திய
பொங்குசீர் பகவானெனச்சொல்ல
மருவியேனின்ற பேரும் யிவையெல்லாம்
வாசுதேவனுக்கே பொருந்துமென
பரவுமற்றவர்களுக்கு தக்கதல்ல
பகவசப்தார்த்தப்பொருளான,

விரவியபலங்கீர்த்தி ஞானசத்தி
வீரியமீச்சொரிய மானதென்று.

241 சொன்னவிக்குணங்களெல்லாம் சுரும்புரை
துளபமால்தனக்குப்பொருந்துமென
பன்னுமம்மால்தானே யாதொரு
பழிக்குகுணமில்லாப்பரமென்று
அன்னவன்றனையல்லால் பகவனென
அழைத்திடுனுமங்க ளகிலமதில்
மன்னுபசாரமென்றே பராசர
மாபுராணத்திலே வகுத்திடுமே.

242 இத்தனைபிரமாணம் பகவனென
இருப்பதினலவன்றனைப்பஜிக்கும்
பக்தரைப்பாகவத ரென்னவும்
பாகவதம் பகவர்க் கீதையென
நித்தியமா யவன்குணத்தை சொல்லுகின்ற
நிகரில்லா நூல்களைக்குறித்துமிக
வைத்திடும்பெயர்களெல்லா முலகத்திற்கு
வகுத்ததிஷ்டாந்தரம்போதாதோ.

243 பகவானென்கின்றனுமம் அந்தப்
பைந்துளாயணிந்த மாயனுக்கே
மிருசாதாரணப்பேர் மேருவை
வில்லெனக்கொண்டவரைச் சொன்னலும்
அகிலமேற்பருதியொடு சோமனை
அக்கினியாதியோரை யுரைப்பதுபோல்
தொகைபெறச்சொன்னதல்லால் நக்கனுக்கு
சொந்தமல்லயிதைத் தெரிந்திடுவீரே.
(தந்தனந்தனதான)

ஸ்ரீ மங்கலகுணப் பிரகரணம் சம்பூரணம்.
ஆகப்பிரகரணம் 15-க்கு கண்ணிகள் 972.
தேசிகன் திருவடிகளேசரணம்.

முதற்பாகம் சம்பூரணம்.





    

ஸ்ரீமத் சடகோபாய நம:

# விசிஷ்டாத்வைத பரத்வ நிர்ணயச்சிந்து

## இரண்டாம் பாகம்.

## 16-வதுதேகநிலை வைதீகதத்துவ விளக்கப்பிரகரணம்

(அவதாரிகை) சித்தான ஆத்மசொரூபம் பிராகிரதமான தேகாதிகளில் தோற்றமோடுக்கமின்னவிதமெனக் கூறுகின்றனர்.

சிந்து. (தந்தனந்தன தான)

241 செப்பிய வேதாந்தப்படி ஆத்மா
சித்தெனும் படியிச்செகமீது
ஒப்பிலாக் கெற்பவாசம் பண்ணுவதை
யுளங்கெளிவுறநா னுரைத்திடக்கேள்
தப்பிய கெற்பாநுபவம் கழிந்திடத்
தானேயாதனு சரீரமதை
கற்பிதமதாகவடைந்து நரகவாசங்
கண்டு வநுபவித்த வதன்பின்னால்

245 புண்ணியத்திற்கிடான தேகமதை
பொருந்திச்சுவர்க்கபதந் தனையடைந்து
எண்ணிலாத்தேவமாத ருபசரிக்க
வின்பமனுபவித்த வதன் பின்னால்
மண்ணுலகம் வருவதற்கு மார்க்கமில்லா
வகையிற் றியங்கியே மருவுமெல்லை
கன்னதற்கெட்டாத நிரா லம்பனக்
ககனத்திடையிலாத்மா கலந்துறையும்

246 ஆதித்தன் கிரணந்தன்னு விமவா
னங்குறு நீரினிட மமைத்திடுவான்
பேதித்தன்னீர் தனிலே ஆகாசம்
பெருகொண்டவிடமாக வதுவிருந்து
சாதித்தன்நீர்வழியால் வருஷதாரை
தன்னிடமாய் வரும்போதவனிமிசை
சோதித்தவிடமிருக்கும் ஆத்யா
துலங்குஞ்சஸ்யங்களுக் காதரவாய்

247 மேவியதுபுகுமளவும் அதிலிருந்து
விளைவுறுந்தானியமதிற் கலந்து
தூவிய வன்னங்களாக வருமளவும்
சொல்லுபல தானியந்தனிலமர்ந்து
சேயெனவும் வரப்புருட னிந்திரியம்
ஜீவனீரம்தனி லதுபுகுந்து
காவிவிழிமங்கையரிடஞ் சுரதநூல்
கலவியிலிருந்திரிய முதரத்துற்று

248 அவ்விதமாய்ப்புருடகெற்பம சுரோணித
மடையமேவோர் திங்களது பிண்டமதாய்
செவ்வையாயது நெகிழ்ந்து கைகால்
சிரமது வேறு வேருய்ப் பிரிந்து
நவ்வியமாதமிரண்டில் இப்படியாம்
நலமுள்ளவைந்தாமாதமுள்ளே
ஒவ்வோரவயவங்கள் ரோமங்க
ளுள்ளபடிவளருவதாமென்ருர்

249 அன்னையருந்திடுவதான ஆகாரம்
அச்சிசுவின் நாபிவழியது செல்லும்
சொன்னபலவவயவங்கள் எட்டுள்
தொகைபடப்பூரணமாகுமென்ருர்

முன்னூறுபிறவிகளெல்லாஞ் செய்தவை
முடிந்தவையனுபவித்தவைகளெல்லாம்
மன்னிடாதினிப்புவியில் செய்திட
மாதவமிருப்பேனென்றுறுதி.

250 ஆதரித்திடமாப்பை குழவியை
அடக்கியெயதுசூழ்ந் திடுபோதில்
மாதமொன்பது வரவே தொல்லை
மரணமுஞ் செனனமுந் தெரிந்திட்டு
ஓதருந்துன்பமுழன்று கெற்ப
யுபநிடமுரைத்த சொற்படியேதான்
பூதலந்தனிலினியே பிறவாமல்
போற்றுதி முகுந்தனை யெனத்தானே.

251 தீதருமவன் மூல மந்திரத்
தியானமே செய்துகொண்டிருப்பானே
ஏதமற்ற குழவியன்னை சுரோணித
மேறிடப்பெண்ணது வாகுமென்றார்
தாதுசுக்கிலந்தானே மிகுந்திடத்
தக்கனற்குளவியாணென்றனரே
பேதமாயன்னையத்தன் ஒத்திடாப்
பெருங்கலவிபின்பக்குவமில்லையேல்.

252 தக்கவந்தக்குழவிகளுங் கூன்குருடு
சப்பாணியாக வந்துதிக்குமென்றார்
மிக்கவேயபானவாய்வு கூறுபாடு
விளைக்கவிரண்டுமூன்றாகுமென்றார்
சுக்கிலசுரோணிதங்கள் ஒத்திடத்
தூயகுழவியலியென்றனரே
பக்குவமாந்தசமாதம் பிரசா
புத்தியெனும்வாய் வழிதாமுகமாக.

253 வீக்கிடப்பெரிதான பொற்கம்பி
விரிவிலாச்சிருதுளே யச்சினிடம்
போக்கிடப்புகுவதுபோல் அவயவம்
பூர்த்தியாய்நெரிபட யோனியின்வாய்
தாக்கியேவூழ்வினையால் தெரிந்திடுந்
தவரில்லா ஞானத்தைப்பரிகொடுத்து
மேக்கொளும் பசியின்றன் வேதனை
விரவிலன்னை யென்னை பாலதிலே.

254 போக்கிட வளர்ந்திடுவான் கைகால்
புனையவும் விரிக்கவுமறியாமல்
சாக்கடை கிடக்கினுமே நாற்றந்
தன்னையறிந்திடான் மெய்தனிலே
தாக்குங்கிரிமிகடித்தா லதுதனைத்
தள்ளவுந்துடைக்கவுமறியாமல்
மேக்கொளுஞ்செயல்களெல்லாம் மனுபோக
விபரீதக் குணங்களின்படியமரும்.

## பிரகிருத தத்துவ வுற்பத்தியின் விபரம்.

255 தோலெலும்பிரைச்சி மயிர் நரம்புகள்
துலங்கிய மண்ணினது கூராகும்
மேலெழு மூளை சுக்கிலம் சிருசிர்
யொய்நிணமுதிரமுனீர்விகற்பம்
மேலுனீள சோம்பலொடு சேத்துமம்
விளைக்கும்போகந் துயில்பசியனலாம்
காவினல் நடையிருப்பு கிடத்தலுங்
கடிகியோடுவதுங் காற்றினமாம்

256 ஒதியபோகமின்பம் துன்பமத
மிணையில்லோபமோகமாகாயம்
ஏதமிலாவாகாய குணமது
வியல்புறு சத்தம் வாய்வதனிடையில்

பேதமில்லாக்குணம் பரிசம் அக்கினியில்
பெயர்வது ரூபநீர்க்குணரசமே
மேதினியில் மணமாமே அக்குணத்தை
விளங்கிடச்செய்வது நாசியென்றார்.

257 பொங்குநீர் குணரசத்தை அறிவது
பொலிவுறு நாவெனப் புகன்றனரே
அங்கியின் குணமதனால் ரூபமதை
அறிவது கண்ணென வறைந்தாரே
தங்கிய வாயுவின்குணம் பரிசமதை
தன்மையென மெய்யறிந்திடுவதுவே
துங்கனீள்விசும்பின்குண மாமொலியைத்
துய்த்தறிவதுசெவி யாகுமென்றார்.

258 பரவுமாகாயகுணத்தை செவிவழிப்
பற்றியே சத்தமதை யுரைசெய்யுமே
திரமுள்ளமொழிவாய்வின் குணமதை
திரேகம்பரிசமதை யறிவிக்குமே
வரவிடுபாணியென்ற அங்கியின்
வகைகுணம் விழியால் வடிவதனை
நிரைபெருபுவியிற்பரி சரிக்கவும்
நீர்மையாற் செல்வது பாதமென்றார்.

259 எயநீர்குணம் வாயால் நுகர்ந்திடு
மிரதவஸ்துவையே விடுமுபத்தம்
ஆயபூகுணமதனை நாசியா
லமைத்துக் கந்தத்தைவிடுபாயுருவென்றார்
மேயவிதுகளுக்கெல்லாம் வேர்தென
விளங்கும்மனதுயென விரிப்பாரே
தோயமாங்கூறுமறப்பை நீக்கறிவை
தூண்டுவதுவும் புத்தியாகுமென்றார்.

260 அங்கியின்குணபாகச் செய்வதெதென்
றறிவிக்கத்தூண்டுவ தகங்காரம்
தங்குமிதுகளைத்தானே தெளிவுபெற
சத்திபெற்றுமுடிப்பதுசித்தமென்றார்
பொங்கியே யுடலினிடமா யிதுவெலாம்
பொருந்தியேவியாபித்திருக்குமென்றார்
துங்கமாம்வாயுவைந்து வைந்துமாய்த்
தொகைபெருமவைகளைச் சொல்லக்கேளும்

261 ஓதியபிராணனபானன் வியானனொடு
யுதானன் சமானன் கூறுமனுகன்
நீதருங்கிருகரனொடே தேவதத்தன்
திகழ்தனஞ்செயனொடி வைதசமாம்
நீதியாம்பிராணவாய்வு இருதயத்தில்
நின்றுமேனோக்கி யெழுந்திடுமே
பேதமில்லபானவாய்வு கழுத்தினி
லினிதுடன் மருவியிலங்கியேதான்.

262 தேறியே சமானவாய்வு தன்னிலையில்
சிறந்தன்னபானங்கள் தனைத்தகிக்கும்
வேறுபாடாக்கிவைக்கும் ஆகுதியாம்
மிகுவயிச்சியவானராக்கினியில்
ஆறியனுகன்றானே விக்கலிவை
ஆகியதுன்பங்களை மிகவிளைக்கும்
ஏறியகூருமன்கண்ணி னிணைகளை
யிமைக்கவும் விளிக்கவும் செய்விக்குமே.

263. மேவிய தும்மலிருமல் வெகுவிதம்
விளைத்திடுங் கிரிகரவாய்வதுவே
தேவதத்தன்மூறிகொட்டாவி தனஞ்செயன்
சிறந்ததேகத்தெழு பத்திரண்டு

வீவிளாயிரநாடி யுள்ளமரும்
விளங்கியபதினே ழவைகுருக்கில்
கோவைசேர் நாடியதிலே பிங்கலை
கூறுமிடகலையே நாசிவழி.

264 தூயசுவாசங்களாகவே சென்றிடுஞ்
சுந்தரகாந்தாரியத்தி சிங்குவையே
மேயவிழிதன்னிலேயுற்று யுருவெல்லா
விளங்கவே சாணுமிப்புவிமீது
ஆயசத்தங்கைகொள்ளுமே இந்தவிக
மலப்புடமின்னபதைச்செவியுணரும்
காயவிந்திரியம் நெற்றி யுரைந்நரா
கவிப்பிரமாணங்களவைபன்னும்.

265 சரசோதிநாடிநாவி யுரைந்துமே
சகலசுவைகளையு மதுவறியும்
விரவியவிச்சுவோதா நாடியவை
மிருந்தவுண்டிதனை வரவிளைக்கும்
பரவியப்பயிச்சுவினி நாடியது
பானங்களானதை வரப்பருகும்
கருதுசங்கினிநாடி தெள்ளமிர்தை
கபாலமுற்றிடவதைக் கலப்பிக்கும்.

266 வாயுவின் மலவிபோ சனந்தனை
வகுப்பது வாகுதியெனும்நாடி
ஏயலிங்கமதிற்றுது மோகனஞ்செய்
திருக்குமத்தெச்சுணிய நாடியென்றார்
ஆயலிங்கத்ததுவிருந்து சிருநீலை
அகற்றிடும் நாடியின் பெயர்வருணை
மேயலிங்கம்விந்தேகுடே அணைந்திடர்
விதமதுமேவிடுஞ் ஜீவநாடி.

267 ஊர்த்துவமுகமாக நாடியெல்லா
மொருவகையாகவது யுந்திவழியில்
சேர்த்தது நாபிசக்கரம் குய்யமது
சிறந்தவாதாரமதா யவையே
பூர்த்தியாங் கபாலகார மட்டுஞ்சீர்
புனைவெளியாயதற் கெல்லாந்தான்
ஆர்த்தவூற்றங்களானது தண்டமென
அழைத்திடு நாடிகளறிவீரே.

268 தீதிலான்மாவதையே ஞானந்
தெளிவுறச்செய்வது சாத்வீகம்
யோதியராகத்துமேவச முண்டாக
வுடற்றுவது ராசதகுணமாகும்
மேதகுஞானவிநாசம் செய்வது
விருப்பிடாத்தாமச குணமென்பார்
பூதலம் பொருளாய்ப்பணிவி இவைகளைப்
புகழுமேடணைகளோர் மூன்றுமே.

269 ஆணவம்மாயை காமியம் மென்னவே
அமைந்தது மும்மலமாகுமென்றார்
பேணுமெலும்பொடுநரம்பு மச்சையும்
பிதாவினுலுண்டானமெய்ப்பேதம்
சோணிதந்தசைமேடொக்கு மாதரவாய்த்
தோன்றியவிவைகளை சட்கோசம்
மாணுறுதூலதேகக் கூட்டமதில்
மதிப்புளதன்னது வன்னமயம்.

270 மருவுபத்தானவாய்வு கூடியது
வளரும் பிராணமயமாருமர்த்தக்
காணம் மனோமயமாம் மிகுசங்
கல்ப்பமே விக்யானமயமாகும்.

யுரைசெய்யுமிந்தணன்கை கடந்திட்
டோங்கியஞான சொரூபமதை
பரிவரிதந்தானேவிரவும் நூல்வளர்
பகர்ந்தது வானந்த மயமாகும்.

271 துய்குதல்பானமோகம் மூப்புத்
துயர்மரணஞ்சடுர மிதுவாகும்
மிக்க சாக்கிரசொப்பனஞ் சுழுத்தியும்
விரவிய மூவகையவஸ்த்தையென்றார்
தொக்கெலும்புதிரதசை நிணமேதை
சுக்கிலஞ்சத்ததா துக்களாகும்
தக்கராகத்துவேடம் யெண்வகை
தழைக்குமங்கவைகளைச்சாற்றிடக்கேள்



## துற்குண வியற்கை இன்னதெனல்.

272 விரித்திடும் ராகமாயை துவேடம்
வெகுளிசிக்கானது லோபமுடன்
கருத்துறுபோகம் மெய்யை அறியாமை
களிப்பதுவேமத மாகுமென்றார்
உரைத்தமாச்சரியமிகு பொறுமை
யொப்பெனக்காரெனவுரைப்பதுவே
இருப்பதாங் காரகர்வம் யிடமதா
யிங்கனமியற்கைக ளாய்கிகழும்.

273 பத்திசோத்தியான்மா வாதி
பௌடீகமாதி தெய்வீகமென்ன
ஒத்திருதாபத்திரைய தேகமது
யுண்மையாஞ் சூக்குமவாய்வருமே
வித்தரித்துரைக்குமிங்கிதில் ஞாலமதில்
மிகுவதைம்பூதமும் புலனென்றார்

சத்ததாதுவும்நீ நாடி கோடிசத
சகஸ்த்திர ரோமங்களுடன்கூடி.

274 மிக்கசத்தாதி விடைய பஞ்சக
வியாபக வாயுவின் பஞ்சகமாய்
தக்கவந்தக்கரணசதுட் டயமொடு
சாற்றியசூட்சும சரீரமதாய்த்
இக்கிரமத்தால் மருவிய பிண்டமதி
விலங்கிய மண்டலம் மூன்றுமே
தொக்கவாதாரமாறு அக்கமலம்
துலங்குஞ்சிதளதளவும் பலவும்.

275 அவ்விடத்ததிதேவதையு மதற்குமே
அமைந்தவக்கிரங்களு மடைவுடனே
மெய்வழியந்தண்சமாதி னிகையுனீள்
மிக்கவெண்குணத்திரிகையுந்தானே
இவ்வகையுரைக்கவேபரந் திருவெல்லா
மிருக்கவுமெய்யுரைந்திடுஜீவன்
கைவரச்செய்த வினைக்கு ஈடாகக்
காட்டிக்கதிதனை யடையுமென்றார்.

———:*:———

## (அச்சராதி மார்க்கம்)

276 முகுந்தனதாய் விளங்குஞ் ஜீவன்
முத்தனுமாத் மாவுடலினைத்தான்
இகழ்ந்திடுங்கால மொடிங்கில் வாக்காதி
இந்திரியங்கலெல்லா மியல்பாக
பகர்ந்திடுமனத் தொடுங்கும் மனமும்
பயின்றிடும் பிராணனிலே யொடுங்கும்
தொகும்பிராண னொளியுலே பொருந்தியச்
சூட்சுமசரீரத்துடன் மேவி.

277 சூரியகிரணத்தயர்ந்த மாந்தர்கள்
சோலைபுக்காரியிருந்தாப் போல
ஏரமரிதையகமலம் பீடமதி
லிருந்த நாராயணன் றனையடைந்து
பாரினிலே யென்றுதுவக்கிகை ஒழிந்துதா
பத்திரியங்களையேதான் தனிந்து
சீரியமூலமந்திரத்தின் தியானமது
சீவனமாகிமிக தேறியவன்றான்.

278 தொன்மை சேரிதையகலம் பொருந்திடு
நூற்றொருநாடியின் முதலாகச்
சொன்மருவுசுழிமுனையின் நாடியின்
துவாரமான ஞானதீபமதை
மன்னியதைவிளக்கிப்பிர்ம ரந்திரத்தை
மருவியே பேதானஞ் செய்துகொண்டு
நன்மையாய்த்திகழ்கின்ற பிரணவ
ரதத்தைநடத்தி விண்ணூரச்சென்று.

279 போற்று சிரச்சராதி மார்க்கம்
பொலிவுறப்போயிடும் போதவிடம்
யேற்றமாயவ்வுலகிலுள்ளோர் ரெல்லா
மெதிரெழுந்திருகரங் கூப்பியேதான்
தோற்றியபிரமனுலகை கடந்துமே
தொன்மையாந் தோயமேமுதலாய
மேற்றிகளேழாவரணமுங் கடந்துபின்
விரசைமாநதியின் னீர்படிந்து.

280 அருளூரனின்றமானவ புருடனு
மங்கையாற் பரிசனஞ்செய்திடவே
மருவுமனுதிப்பகுதி வழியாம்
வாசனையனைத்ததையும் மாற்றியேதான்

பெருமையாலுயர் தேஜோன் மயமாய்ப்
பிரர்கிருத தேகமும் பெற்றுயர்ந்த
சரியில் முத்தர்களெனும்பேர் படைத்துமே
சச்சிதானந்தரூபனுகவேதான்

281 மிக்குயர் பரமபதத்தில் நர்ளும்
விளங்கியவாசுதேவன் றன்னுடனே
தக்கமேன்மையால் விளங்கித் தானும்
சந்ததானந்தனுயத் தழைத்தோங்கும்
இக்கிரமபிண்டவுற்பத்தி யென்னுநூல்
இசைத்துமிக விளங்கவேயுரைக்கும்
நெய்க்கடல் வற்றிடக்குடிக்கச் செல்லெறும்பு
நிலத்தில் நினைக்கவே யொக்குமென.

282 ஏனையவிவற்றின் பலவாம் பிரமாண
மெவ்விட மெவ்விட மென்றுரை செய்யுங்கால்
ஞானமெய்யுபநிடதம் தன்னினுமே
நற்பராசரபுராணத்துள்ளும்
தேனிகராச் சவர்க்க நூற்பிராய
சித்தகண்டத்தினுஞ் சரீரத்திலே
தானமான தெல்லவுந்தெளி வாகப்புவி
சாற்றிய வாகட்ந்தனிலரையும்

283 தன்னிகரில்லா துயர்ந்த பிரபஞ்ச
சாரமாகிய வந்தப்படலந்தனில்
பன்னியபிண்டவுற்பத்தி யென்பதற்கு
பகர்ந்திடும்பல பிரமாணமுண்டு
இன்னதுணிற்கவிதைய வம்புயத்தில்
இசைந்திடுநாடிகள் நூற்றியொன்று
மன்னுமென்பதற்குச்சுழி முனைநாடி
மார்க்கம்முத்திதனை மதித்துச்சொலும்

284 சாமவேதாந்தமான யியல்புள
சாந்தோககினி சலதியேழாடை
யா மூலகமெண் ணுமாச்சா வர்க்கமதில்
ஆத்துமவிவரணமதை யறிவிக்கு
தோமிலாப்பஞ்சராத்திர மென்னத்
துலங்கியதொல்லை னூற்றனிலுரைக்கும்
வாமமேகலையுடையாய் தெளியவே
வகுத்துரைத்தது பலபிரமாணம்.

285 தாதவிழ் தொடைசூழும் நந்தன்
தனையனருச சுனர்க்குரைபகவற்
கீதைனூலாச்சாவர்க்க மதில்மிக
கிளர்ந்தசிர்பஞ் சராத்திரத்துள்ளும்
நீதருமுத்தர்செய்யும் அச்சராதி
சிறந்திடுமார்க்கத்து முரைசெய்வதை
யோதியது லகர்க்கெல்லாம் தெளியவே
யுகந்துரைக்கும் பிரமாணங்களே

தேகனிலைவைதீகதத்துவ விளக்கப்பிரகரணம் சம்பூர்ணம்
ஆகப்பிரகரணங்கள் 16-க்கு கண்ணிகள் 1140
ஸ்ரீதேசிகன் திருவடிகளேசரணம்



## 17. பஞ்சாட்சர மறுப்புப் பிரகரணம்

(அவதாரிகை) பஞ்சாட்சரமான ஐந்துயெழுத்துகள் தூல தேகசொரூபமேயன்றி சூட்சுமதேக சொரூபமல்லவென்று பஞ்சாட்சரதியானத்தினுல் இகசாதனங்களை அடையலாமே அன்றி பரலோகசாதனத்தையடைய ஏதுவில்லையெனவுங் கூறுகின்றனர்.

(தந்தனந்தன தான.)

286 தத்துவநிச்சயங்களைத்தான் வேதவிதி
தன்னிலுரைத்தபடி சாற்றினன்கான்
மெத்தவறிவுடையோர்கள் மேலுரைத்த
விபரமறிந்துவினை கொய்திடுவீர்

முத்திவழியடைவதற்கு பஞ்சாட்சரம்
மூலமெனுமந்திரங்களல்லவிகத்தின்
சித்திபெருஞ்சாதனங்களைப் பெருவதற்கு
சிறந்ததுதாமெனச் செப்புவதைக்கேள்

287 ஆத்மபரநாரணனிட முற்பவித்த
அநுரூபமானதொரு ஜீவாத்மா
ஏத்தியநமசிவாய மென்றபத
மிணையிலாநாரணப் பிரணவத்தை
சேத்தியேயுச்சரிப்ப தென்றதனை
செப்புவன் சுருதியின்படியளவில்
நேத்தியானபஞ்சபூத சொரூபமென
நிகழ்ந்தும் நமசிவாயபதம்தன்னை

288 பஞ்சபூதமானதேகம் சீவனிலையேல்
படியிற்பிரேதமாகுமதுபோல்
நஞ்சமர்களத்தானுடைய பூதபஞ்சக
நமசிவாயத்திலுயிரிலையதனால்
விஞ்சியவாகமத்துரைவார் பிரணவ
மெய்முதற்பூதமைந்தெழுத்துடனே
தஞ்சமான வெண்ணெழுத்திலே ஒன்றான
தனித்தபிரணவத்தைக் கூட்டியவர்

289 அமதியாய்ப்பஜிப்பார்க ளிவ்வுலகி
அஞ்செழுத்து மூன்றுபதமாயிருக்கும்
எமதல்லவென்றுரைக்குமே நகரமதை
என்னுடையதென்றுசொல்லும் மகரமதே
சம்னிலாப்பரத்தினிட முண்டான
சாற்றுஞ்சிவாயபத மிரண்டாச்சு
தமைநிகரொன்றுமில்லா நாரணன்
தன்னிடையிலுண்டான சீவாத்மா.

290 ஒன்றுசிறியென்றதிருவா யாயவென்ற
துறைவிடமெனச்சொல்லு மருமறைகள்
நின்றதிந்தவிதமான பஞ்சாச்சரம்
நிகழ்த்தும் நமசிவாயபதந்தனையே
என்றுமிதையுச்சரிக்கவே பிரணவ
மில்லாமலாகதென்று கமங்கள்
அன்றியுபநிடதமெல்லாம் மந்திரகோடிக்
காதியான பிரணவமானதென்று.

291 கூறுகின்ற விதையன்றியே பரம்பொருளைக்
குறிப்பறிவிப்ப தாத்மாவதனுல்
ஆறுசடைவைத்துயுகந்த சங்கரனே
டனைவரும்நாரணன் பரமென்றூர்
ஏறுடையசிவன் பரமென் றுகமங்கள்
இயம்பிடவில்லைபது பரம்சிவமாய்
வேறுபடக்கூறியதனுல் பர[illegible]த்தில்
விளங்கியபஞ்சபூத மெனல[illegible]சு

ஆகப்பிரகரணங்கள் 17-க்கு கண்ணிகள் 1164
பஞ்சாட்சர மறுப்புப்பிரகரணம் சம்பூர்ணம்
தேசிகன் திருவடிகளே சரணம்.

———:*:———

## 18. ராசததாமதனூல் வர்க்க கண்டணப்பிரகரணம்

(அவதாரிகை) காரணந்துத்யேயஃ என்ற பிரமாணப்படி காரணவஸ்து எவனே அவன் தியானத்திற்கு உரியவனென்று வேதங்கள் முறையிடுவதாலும் வேதாகமபுராணயிதி காசங்கள் குணசம்பந்தத்தினல் சாத்மீகம் ராசதம் தாமதம்என்று பிரிக்கப் பட்டிருப்பதினுலும்இதில்கண்டபடி தாமசராசதநூல்களைத்தள்ளி சுத்தசாத்வீக நூல்களைப்பார்த்து யதன்படி தெரிந்துகொள்ள வேணுமென்றுங் கூறுகின்றனர்

(சிந்து தந்தனந் தனதான)

292 என்னயிதுதனை யுரைத்திர் ஆகமங்கள்
இந்துவேணியன்றனை யிறையெனவச்
சொன்னசொற்களை யெல்லாம் சிறந்தவித்
தொல்லுலகத்தில் பிரமாணமல்லவா
அன்னதுபோனாலும்போகட்டும் புராணங்க
ளரன்மகிமையை யுரைத்திடுவதெல்லாம்
இன்னிலத்திலுது பிரமா ணங்களென
யிசைந்திடவில்லையாயிது பொய்யோ.

293 அல்லவிதையுரைத்திடுவேன் புராணமதி
ளருளியசாத்துவீக ராசதமும்
அல்லலுறுந் தாமதமுஞ் சங்கீரண
மானதால் விதமுள்ளகற்பமெனும்
எல்லைபற்ற பரம்பொருளாம் நாராயண
னிடத்திலுண்டான முக்குணமதிலே
சொல்லொணாத்திதிலயமும் சிருஷ்டியும்
துலங்குமெனவுரைத்த மறைப்படியே

294 தயித்தியவைரிதனை தேவர்முதல்
தவசியர்சாத்வீக தேவனென்னும
இயற்பதுமத்திலுற்ற திசைமுகனை
இணையிலாராசசக் கடவுளென்னும்
சயித்திரி சூலத்தானை எல்லவரும்
தடையின்றித்தாமத மூர்த்தியென்றார்
மயித்திராவருணியுப நிடத்ததில்
வகுத்துரை செய்யுலகபாடமதே

295 பொலியுமிவ்வேதாந்தம் புகன்றனற்
பொருளினிற் கேற்பவேபுவிமீது
நலமுள்ளபரன் றனக்குத் தொண்டுசெய்
நண்பரேகூறும நாமநூலில்

அலகறுசெஞ்சொலான நாற்பத்
தைந்தெனுமத்தியாயத்தில் மிக
விலகியபிரமாணம் முளதினி
எடுத்துரைப்பேனினிதாகவேநான்

296 தாமசம் சாத்வீகம் ராசதம்
சங்கீரணமெனும்நால்வகையில்
நாமமேவியகெற்பம் நான்கினில்
நவையறும் பதங்களுமுண்டெனவே
நேமதாமதமுடையோர் நக்கனை
நினைப்பர்கள்பரமென மறையுறைக்கும்
மாமலரோன்றனையே ராசத
மாந்தரும் பரனெனமதிப்பாரே.

297 சாத்திகெற்பமெல்லாம் திகரியுஞ்
சங்குந்தரித்தவனைத்தாம் பரமாய்
வாய்த்தசங்கீர்ணகெற்பம் தாமரை
வாணியைப்பிதுர்களைப் பரமென்று
தோத்திரஞ்செய்யுமெனவே எல்லாத்
தொல்புராணங்களு முறைசெய்வதால்
வத்துசாத்தீகமுத்தர் தங்கட்
கிசைத்ததெய்வ வழியோரொப் புவாரே

298 பொன்னெடு வரைசூழ்ந்த கடலுடைப்
புவியின்மீதுறுமாந்தரே கேளீர்
நன்னிலம்மதித்தகெற்பம் நான்கினிற்
நடைபெருகுணங் களுக்கேற்றபடி
அன்னகெற்பங்களுக்கே யுள்ளகுணை
மடையும் புராணங்களுண்டெனவே
சொன்னசொற்களை யெல்லாம் இன்னமும்
தொகுத்துரைப் பேனிதன் பின்னாலே.

299 வாய்த்தசத்துவகுணத்தான் என்னவே
மாயன்றனைக் குறித்துரைப்பதெல்லாம்
சாத்திகபுராணமென்றார் மேன்மைத்
தருமிராசத குணந்தன்னாலே
மூர்த்தியாய்வயங்குகின்ற செய்ய
முளரியாசனை கேள்வன்றனையே
ஏத்துபம்புராணமெல்லா மிப்புவியில்
இணையிலாராசத புராணமென்றார்.

300 நாமதாமதகுணத்து பிறையுடை
நக்கனையுரைத்திடு நூல்களெல்லாந்
தாமதபுராணமென்றார் தரைமிசை
தழைத்தசங்கீரணம் தன்னாலே
பாமகன்முதலினோரைப் புகழ்ந்து
பகர்வசங்கீரண புராணமென்ன
ஆமையும்மச்சபமென்ன சொல்றெண்
டடைவுளபுராணங்க ளோதியதே

301 திரமிகுசாத்வீகம் புவிமேல்
சிறந்தவுத்தமமெனச் செப்பிடுவார்
வருகின்றராசசமாம் குணமது
மத்திபம்தாமதகுண மண்மேல்
விரவிபவதர்மமெனும் இதனையும்
விண்டுதன்மோத்திர முடனிந்தத்
தரைமிசைநாரதீயம் இரண்டுமே
சாற்றுமிதனைச்சரியெனத்தானே

302 சாத்தீககுணந்தன்னால் பரமஞானந்
தருமிராசதகுணந் தன்னாலே
வாய்த்திடுமெண்ணிலாத லோபங்கள்
வருந்தாமத குணந்தன்னிலேதான்

எத்திடாஞானமுடனே விபரீத
மென்னயிருவகையா ஞானங்களும்
பூர்த்தியாயடையுமென்றே விசையனுக்கு
புகன்றபகவற்கீதைபொருந்தச்சொலும்

303 பத்தரிடரட்சணக்காகத் திகரிகை
பற்றியசத்துவகுணப் பரமன்றனை
முத்தியையளிக்கவல்ல நாரணன்
மூர்த்தியென்றகஸ்திய மாமுனிக்கி
உத்தமபன்மதன்வீய நெற்றிவிளி
யுமிழ்கின்ற கண்ணினனுரைத்தமொழி
இத்தரையிலுரைத்திடுமே வராகமென
இசையும்புராணமதி லியம்பிடுமே

304 ஏத்துசாத்வீகமுடையோர் மருஜனன
மிமையைவராய்ப் பிறந்திடுவோர்கள்
வாய்த்தராசதகுணத்தோர் பிராகிருத
மனிதராகப்பிறப்பார் வஞ்சகராய்
பூத்ததாமதகுணத்தோர் பாரனிற்
புள்விலங்காவர்க ளெனவுரைசெய்
சாத்திரங்களின்மேலாய் வயங்கிய
தரைபுகழ்மனுவினிற் சாற்றிடுமே.

305 புண்ணியபதம்பெருவார் சாத்வீக
பொருந்தியமாந்தரும் ராசதமாய்
யென்னுனற்குணத்தோர்கள் சுவர்கத்
தெய்துவரெனச்செப்பித்தாமதத்தோர்
நண்ணுவர்நரகிலென்றே சொன்னது
நவையறுபதமென்றுரை நூலில்
கண்ணுதலின்பெருமானு ரம்பிகைக்கு
களரும்மொழியை மிகவாயுரைக்கும்

306 பன்னியவுலகின்மேலே ஜெனனவுற்
பத்தியாம்போது செங்கணமாயனிட
தன்னருளேபெற்றதேகம் சுத்தமான
சாத்வீகதேகமெனறும் சங்கரனார்
மன்னியசரீரமதுவும் தாமதமான
மனிதவுருவென வகுத்துப்பின்னே
அன்னவாகனனருளைப் பெற்றதேகம்
அகங்காரராசத மென்றனரே.

307 அளவிடற்கரிதான அண்டகோடிக்
கப்பால்விளங்கி தேஜோமயமாய்
வளமிகுந்திலங்கு தெய்வ மானவன்
மங்களகுணமெல்லாமவைகளிலே
விளைபவனுகையாலே யிசையொடு
மெல்லளிமுகந்து பாடுந்தாமத்
துளவணி மாயனையே சந்ததமுஞ்
சுததசாத்வீகனெனச்சொல்லியதே.

308 ஆதலினுல் ராசதத்தோடே அமைந்ததான
அடவுள்ள தாமதனூல்களெல்லாம்
ஓதியபுராணனூல்கள் மறைதனக்கு
வொவ்வாதுயிந்த வுலகந்தனிலே
பேதமாம்பாகமெல்லாம் மெருவதான
பிரமாணமல்லவெனப் பொருள்படித்தி
முதறிவாளரான்னோர் பெரியோரும்
முத்தரும்யிதனைக்கைகொள்ளாரே.

ராசத்தாமதனூல் வர்க்கப்பிரகர்ணம் சம்பூரணம்.

ஆகப்பிரகரணம் 18—க்கு கண்ணிகள் 1232.
தேசிகன் திருவடிகளே சரணம்.

———:*:———

## 19-வது ஆகரர நியமனப் பிரகரணம்.

(அ. கை.) யுஜ்ஜீவக்கூடிய சேதனர்களுக்கு உபயோகிக்கக்கூடிய ஆகார பதார்த்தங்களில் சுத்த அசுத்த மின்னதெனக் கூறுகின்றனர்.

(தந்தனந்தன தான)

309 ஆகார நியமனத்தை இங்ஙனம்
அறிவிப்பே னன்பொடு வகிலமதில்
போதாதுபோக்கிவைத்த முனிவர்சொன்ன
பொய்யாத மொழிகளைப் பொருந்தக்கேண்மின்
ஆகாதவழிவிலக்கி அண்டகோடி
ஆக்கும் கண்ணனருச்சுனர்க்காய்ப்
பாகாயுரைத்த நியமம் அந்தப்
பண்புறும்விதம் தன்னைப்பகர்வேனே.

310 பின்வாசல் வழியாலும் அல்லதொரு
பிரவடைப்பக்கமதில் வந்தசாதம்
வன்பான பெருவரகு சோளமுடன்
வாருதினை சாமை கேள்வரகு
தன்வாயில் நின்று வீழ்ந்த சாதமுஞ்
சாப்பிட்ட கவளத்தின் மீந்ததுவும்
அன்பிலாப்பஞ்சமர் துஷ்டர் பார்த்த
அன்னமுமாகா தென்றுரைந்தனரே.

311 பாத்திரத்தினடிச்சாதம் நாய்முதல்
பார்க்குஞ்சோறுந் தீண்டியசோறும்
நேத்தியான பசுமனிதர் முகரலும்
நிசித்தமனிதரால் தீண்டலுமே
பாத்தியம் பிரீதியினிமை ஆதரம்
பற்றில்லாதவர்களளிக்குஞ்சாதம்
சாத்திரங்கற்றோரிதனை அருந்திடத்
தக்கதல்ல ஈபுழுநூலிருந்தால்.

312 நூலுரை சீரை தும்மல் இவைகள்பட்ட
நிந்தையுள்ள சாதமுந் துறவரத்துப்
பாவினர்கள் தந்த சாதம் இவர்கள்பிக்ஷா
பாத்திரத்தில் பட்டசாதம் தினத்தாலே
சீலமில்லா வன்னங்களும் எலி குக்கிடஞ்
சேவலொடுகாகம் பூனைவாய்கொண்டால்
மாலினடியார்க்காகா தென்பதனை
மறைகளுஞ்சொல்லுமிந்தமானிலத்தில்.

313 அத்தியாலரசு புங்கு நருவிலி
ஆயிலொடு வேளையுள்ளி தசப்பூண்டு
சித்தவரைபண்ணைதொய்யல் முளரிபொடு
தொய்யல்கொட்டி கிழங்குபனங்கனியே
சுத்தியில்லாநிலத்திலுற்ற கடம்புகாளான்
சுரைபீர்க்கு சிறுகீரை செவ்வகத்தி
இத்தனையோ யிருமுருங்கை யிருவசலை
இதனைப்பிரபன்னர்களேர்க்காரே.

314 பரித்துக்கொடாதவைகளும் சிருமியர்
பாகம்செய்ததுயின்னபொருளென்று
கருத்திலுணரவொண்ணு வவைகளும்
கசப்புப்புளிப்பினிப்புதுவர்ப்புப்பு
விரித்தகார்பிவைகளிலே அளவுக்கு
மிகுத்திடலாகா தெனவிளம்புவரே
அருத்தியாய் மால்தனக்கு ஆராதனை
ஆகாப்பதார்த்தங்களகற்றுமென்றார்

315 காலமின்னதெனவுரைத்த அந்தக்
காலந்தவர்த்து வுண்ணுங் காய்கரியும்
கோலமுள்ளவாவணங்கள் அதில்விலைக்கு
கொண்டதைஜலம்விட்டலம்பாதவையும்

நூலினிற் குறித்திடாத பதார்த்தமு
நுண்ணறிவினோர்களு மருப்பசியால்
சாலவுமெலி ந்தவர்கள் இவரிருக்கச்
சாப்பிடும்பதார்த்தங்களாகாதென்றார்.

316 நிந்தையுள்ள மலஜலங்கள் பட்டதொடு
நேரிலாத்தேவருக்காகவென்றே
பந்தமொடு சேகரித்து வைத்ததொடு
பசுபதிதனக்கு நிவேதிதமான
விந்தையான தளிகையன்னம் தாம்பூலம்
விதமலர்ச்சந்தன குங்குமமெவையும்
இந்திரியங்களுக்கொவ்வாப் பதார்த்தங்க
ளெல்லாமாகாதென் றுரைத்தனரே.

317 நிச்சயமின்னதென்றே பண்டினில்
நினைக்க வருவருப்பாயுளவெவையும்
இச்சையிற்றெளிவுராததும் எதாகாலத்
தில்லாத பூவுங்காய் கிளிஞ்சிசுண்ணம்
அச்சுதனார் தனக்குமுன்னம் திருவா
ராதனம் செய்யாதபுதுப்பைங்கூழ்கள்
மிச்சமாய்முளைத்த காம்பில் மறுபடி
விளைந்த தானியங்களாகாதென்றார்.

318 இல்லறந்தனைக்களித்த மனதுடையார்க்
கியலாப்பதார்த்தங்கலாகாதென்றார்
நல்லதல்லமுகர்ந்தவையும் பகல்விளா
ராத்திரியெள்ளுடன்சேர்வர்க்கமெல்லாம்
சொல்லினராகாதெனத் தவஞானந்
தொலைக்கும் பதார்த்தமுந் தில தயிலம்
அல்லுபகல் சந்தி நடுச்சா மத்திலூண்
ஆகாது சாப்பிடவென்றகற்றினரே.

319 குளித்திடாவுண்ணுமூணும்வேறொருவரை
கூட்டியுண்ணுதவூணும் பிரார்ஙகயில்
அளித்திட்டவூணக்கினி அதன்பிர
காசம்மதியிதைத் தீபமெனக்
களித்தூணுண்ணல்பதி சதியேக
காலத்திலுண்ணுமூண் கர்மத்தின
விளைத்தங்கமூனமான இவர்னைக்
கிருக்கும்பதார்த்தங்க ளாகாதென்றார்.

320 இடக்கையூண் போஜனமத்தி பரிமாறு
மினியகிரத மிருப்பிலுங்கையிலும்
வடிக்குப்பதார்த்தங்களும் கண்காண
வந்தலவணமொடு பித்தவர்க்கம்
கடித்ததிலுள்ளசேஷம் மிருத்திகை
கந்தமான தயிலாராசைப்
படுபொருள் நிந்தித்தவையும் வூசின
பழையதும்பிரபன்னர் பற்றாரே.

321 தந்தையாசாரியனும் மூத்த
தமையனிவர்களெச்சிலாமெனவே
பைங்கொடியார் தங்களுக்கு கணவனெச்சில்
பௌவுத்திரம் நூல்மயர்புழுவிருந்தால்
நிந்தைபல்ல மண்ணிட்டால் கூவிளங்கனி
நேரில்மாதவ முறுங்காலத்து
சந்ததமாராதனமாங் காலத்து
தக்க மாதுளங்கனி மிக்கதர்மமே.

322 முந்திய பலன்களெல்லாம் நல்லவை
மோரும் பஞ்சதாரை யவுடதமும்
நிந்தையில்லாப்பால் கரும்பு கோதுமை
நெய்தயிர் ஜலங்கறியிவை சேர்ந்து

வந்த பழையவூணும் நன்றென
வழங்கினர் பெரியோரிவைதன்னால்
வெந்தபல் பலகாரம் பழையதெனும்
விரும்புவர் மேலோராவி ஜலம்.

323 வடித்த தயிரும் வெண்ணை காய்கறி
வருக்கமும்பூவுநன் றாசிடினும்
அடுத்தபிராணவந்தம் ஆகாதென்
றகற்றியதெல்லாம் நன்றெனரே
விடுத்த பதார்த்தங்களை செய்தேன்
விட்டுபயோகிக்க னன்றெனரே
எடுத்தனர் மேலோர்கள் இப்புவியில்
இயம்புவன் சுத்தசுத்தப்பால்களையே.

324 திட்டமான கரவுடனே குதிரைப்பால்
சேர்ந்த லவணமோர் விட்டபாலும்
ஒட்டகைப்பால் கன்றில்லாது கறந்தபா
லுலையில் பிருத்தபால் மறுகன்றினை
விட்டுமே கரந்ததான பால்களன்றி
வேதியரிடத்து விலைப்பால் செம்பில்
பட்டவிந்தப் பால்களெல்லா மாகாதென்று
பண்புறுமறிஞரிதைப் பகர்வாரே.

325 இரவியிலுலர்ந்ததான தீசலம்
இவற்றினிற்சேர்ந்து வெந்தவைகளுமே
எரியன்றி வெந்தவைகளும் பழுத்த
இனிய கதலி பலகனிகளெல்லாம்
சரியெனவுலர்ந்தவப்பம் வடகமும்
தக்கது பழையது கெடாதிருந்தால்
பிரியமாய்ப்புசிப்பார்கள் சுத்தமெனப்
பெரியோரிவை நிற்க ஜலவர்க்கம்

326 கங்கையல்லா மற்றஜலமும் ஒருதினங்
கழிந்தஜலமுங் கால்கழுவிமிச்சம்
பங்கமுறு வண்டல்மார்க்கம் சிரியகுழி
பற்றியநீர் தீவெந்த யிளனீரும்
இங்கிதத்தண்ணீர்பந்தல் எச்சிலான
இரஜதீர்த்தமொடு பூகதமும்
சங்கபாத்திர ஜலமும் இவைபருக
தக்கதல்லவென்றுமனு வுரைசெய்யுமே.

327 பாக்குமுன் வாயிலிடல் வெற்றிலையை
பச்சியாதுயடினுணி நடுவீர்க்குப்
போக்கிடாதருந்துவது விதவையொடு
பொருந்தப் பிரமசாரி சன்யாசி
மார்க்கதைக் கொண்டவிவரோ டிருந்து
வன்சுண்ணமிட்ட வெத்திலையருந்தல்
நீக்கிடாத்துக்ககாலம் தாம்பூலம்
நிருத்துதல் கடனென மொழிந்தாரே.

328 கங்கிருளால் விடியாத வுலகுக்கெல்லாம்
கைவிளக்கதாமெனக் கமலக்கண்ணன்
பொங்குபுகழ் ஞானமிகுந்த விசையனுக்கு
பொருந்தச்சொலுமுறைப் புவிமீது
மங்குடலும் பொருளுமல்லா தறியாத
மாந்தருக்கு நீதிவரம் பொழியாது
பங்கைய மாதுற்ற வுணர்வின் திருவருட்
படியிலிங்கனமிதைப் பகர்ந்தேனே.

ஆகாரநியமனப்பிரகரணம் சம்பூரணம்.

ஆகப்பிரகரணம் 19-க்கு கண்ணிகள் 1312.

தேசிகன் திருவடிகளே சரணம்.

—:o:—

## 20. திருமண்காப்புவிதிப்பிரகரணம்.

(அவதாரிகை) துவாதசவூர்த்வபுண்டரம். அதாவது பனிரண்டு நாமங்கள் தரிக்கவேண்டிய முறையும் அதற்குள்ள மந்திரங்களுமின்னதெனக் கூறுகின்றனர்.

(தந்தனந்தன.)

329 வேதசாஸ்த்திரனூலில் திருமணிட
விதித்த விதமதனை விளம்பிடுவேன்
நீதியுள்ள மறையவற்கு இதையணிய
நேர்வதன்றி மற்றவர்க்காகாதென
ஏதமில்லா நீறுதானே சூத்திரர்க்
கிசைந்தபடி தறிக்கலாமெனவே
ஓதிய பொருளையெல்லாம் நன்றுணரு
யுத்தமராலிது தெறிந்துரைப்பேனே.

330 மின்னெழில் திருமண்விதியை எசுர்வேத
மிசைக்குமாரணவாளுரும் பரிசம்
மன்னுமூர்த்தவபுண்டரம் தரித்தவரை
மாதவனெத்துன்ப மெய்தாதபடி
இன்னிலத்திற்கார்ப்பமென ருக்குவேத
மிசைக்குந்தெளிவுபெறயினிக்கேளும்
அன்னநாரணனிரண்டு திருவடியா
அமைத்துயிடைவெளி திருத்துவரே.

331 இட்டமுடனரையுமவர் பாதகத்தை
இல்லாதகற்றித்திரு வுள்ளமுகந்து
மட்டில்லாச்சுகமுடைய பரமபதம்
மகிழ்ந்துதருவரென வகுத்துரைக்கும்
முட்டிய தலமுரைகழேழ் செயும்பலம்
முடிக்கிப்பரமபதம் தருவரென

திட்டமுடனேதியதுவே எசுர்வேதம்
தீதிலாச்சாகையிது மட்டன்றியே.

332 பன்னுமகோயுபநிடத மின்னமதில்
பகருனீள் புண்டரம் மறையோர்க்கு
சொன்னது விஷேசமெனவே பலதெய்வந்
துதிப்பவரானாலு மவரவற்கு
அன்னதுமிகவிசேட மென்னவெகு
ராரணத்தும்பலவிட மரைந்திடுமே
இன்னசெஞ்சொற்களெல்லாம் பிரமாண
மென்பதுமேபோதாதா யின்னமுங்கேளீர்.

333 மறையவரரசருக்குத் திருமண்ணிவை
மற்ற வணிகருக்குச் சந்தனமும்
அறையும்பிரமசாரிக்கு வதுதனையே
அடைவுள சன்யாசி சூத்திரர்க்கு
முறை திருநீரதனைத் தரித்திட
முக்கியமெனத் தாபனீயயுபனிடதம்
வுரைசெய்யும்வீணைகையிலே யுறுமுனியை
யுற்றடிபணிந்து யொளிர்முகமதனை.

334 நோக்கியித்திருமண்விதி தன்னைமிக
நிகழ்த்து மணிதலமந்திரமுள்ளி
லாக்குமதி தேவதையுந் தியானமும்
அறிவிப்பீரென நான்மறைச்சிக்கை
போக்கும் வேதவியாச மாமுனி
போற்றிசெய்தவரை வினவிடவே
வாக்கொடுபுலனைந்தும் அடக்கிய
மாதவயாழ்முனி மகிழ்ந்துரைக்கும்

335 ஓதுமறைகரைகண்ட முனிவகே
ளோர்த்தவபுண்டரமாம் விதிதனையே

தாதுனிரைபதுமாகார மகாரமொடு
சங்காகாரமிவைகளெனச்செப்பி
திதறுமச்சுவ பத்திரம் வேணுபத்ர்
தீபாகாரத்திறெடுமால்சரணம்
போதவருமாகாரத் திந்திருணி
புஸ்பராகத்திஞெடு பொருந்துமென்.

336 இப்படியூர்த்துவ புண்டர மந்தணற்
கியல்பெனப்பதிதருமாசாரம்
தப்பிய சூத்திரர் தமக்கு குருக்கிடத்
தன்மையெனச்சொல்லியெந்தமரினரும்
ஒப்பிலா மாதவனுக்கு அன்புடையற்
குகந்துதிருமண்விதிதனையுரைக்கும்
செப்பியவிதுகளன்றியே பராசரனர்
சிந்தையுவந்தருள் முனியேகேளும்

337 ஓதுமறையவரூர்த்தவ புண்டரம்புனே
வுயர்வெனச்செய்யகோலோச்சுகின்ற
நீதிமன்னவர்க்கிதனேச் சாந்தமென
நிகழ்ததும் வணிகருக்கு வில்லுவமும்
ஏதமற்ற சூத்திரற்கு வெண்ணீற்றை
இசைக்குமிதைத்தவிர்த்தொருவருக்கு
சாதித்தபடியைவிட்டு எப்போதுந்
தரிக்கலாகாதெனவுரைத்தனரே.

338 மன்னுதிருநாதன் வாழும் புண்ணியமான
மகச்சேத்திரமானமகிதலத்தில்
சொன்னகங்கை முதலாய நதிக்கரை
துளவங்கமழுகின்ற மூலத்தும்
அன்னதிருமண் தரிக்க விசேடமென்ன
அறைந்தனராரணங்கற்றோரே

இன்னபடியாகவுரைத்து யிதைத்தரிக்க
விடங்கள் பதின்மூன்ருயிருக்குமென்று

339 சொல்லியிராறுவொன்று யெட்டெனத்
தொகுத்துயாறுநான்கொன்றெனவே
நல்லதென்று பதின்மூன்ருய் நாட்டுமிடம்
நானுரைக்க நெற்றிவயர் மார்புகளம்
வல்லவலத்தோளிடத்தோ ளிரண்டுபாக
வயர்வெரின்பிடரியுமாமதுவே
அல்லதுகழுத்திருபக்கம் சிரத்தினெடு
வாவது பன்மூன்றெனவறிவித்தனர்

340 பன்னிரண்டுகேசவாதி தாமோதரம்
பத்துமூன்றந்தமது வாசுதேவன்
அன்னையெட்டாயிடும்போ திருநா
லக்கரமிருமூன்ருயணிபோதில்
இன்னவிவாக்கேசவாதி மதுசூதன
னென்றவரையுள்ள மந்திரமாகும
சொன்னநாலவகை தனக்கு கேசவனச்
சுதனனந்த கோவிந்தனென்றனரே.

341 பத்திதனக்குரியவிந்தக் கேசவாதி
பகரும்வாசுதேவ வந்தமாரேழ்
இத்தகைய மந்திரத்துள் திருமண்விதி
இதநகேதென யிசைத்திடுவார்
ஒத்துனல்விரலகலம் பக்கங்க
ளொவ்வொன்ருேர்விரலதாமகலம்
வைத்துயிவை நாசிமுதலாய் கேசம்வரை
வண்மையாயணிவர்களெனச்செப்பி

342 இடைவெளியிரண்டளவில் ஸ்ரீசூரண
மிலங்கவேணு பத்ரதீபமென

தடையின்றித்தரிக்கவல்லா ராயிடில்
தானென்னைநிந்தை செய்பவராகும்
படியைப்பிரமமென்ற புராணம்
பகருமுலகில் வெளிப்படையாக
வடியுள்ளயிடைவெளியில் திருவொடு
மருவுவோமென மாதவன்சொன்ன.

343 இந்த ரகசியப்பொருளை இசைத்தன
ினின்றுனக்கு வென்றனரிவையெல்லாம்
முந்துபுகழ் நாரதீய புராணமிகு
முப்பதுவொன்பதுவெனுமத்தியாயம்
வந்ததை யிசைத்தனனினி நாரணன்
மலருரைபவனுக் கிப்புண்டரத்தை
சிந்தையில்மதித்துயிடுவார் முத்தரென
செப்பினாரப்பிரமன் தேவருக்கு.

344 சிரியமாமுனிவருக்கும் இதைவிடுத்துச்
செய்கின்ற வநுஷ்டான செபதபமும்
வாருதிசூழ் கடலுலகின் பலன்களின்
வகையொழிந்திடுமெனச் செப்பினரே
எரணியிப்புண்டாத்தின் மகிமைதனை
இந்துவேணியனுமைகுரைசெய்யிதை
பாரினிலாசரிப்பவன்றான் முத்தரிவர்
பரமபதமடைவரெனவுரைத்தார்.

345 இந்தவூர்த்துவபுண்டா மதனைக்காமன்
இமையவர்க் கிதவுபதேசம் செய்தார்
அந்தவனல்தேவனுமிதைத்தென்புலத்தோர்
க்றியயிதனை யெடுத்தோதினரே
சிந்தையுவந்தந்தாத்தோர் முதலாய
தென்புலத்தோர்முனிவர்கந்தருவர்களும்

வந்தனைசெய்தெல்லவரும் மிக்கபெரு
வானுலகபோகமெய்திவாழ்ந்தனரே. (தந்தன)

திருமண்காப்புவிதிப்பிரகரணம் சம்பூர்ணம்.
ஆகப்பிரகரணம் 20–க்கு கண்ணிகள் 1380
தேசிகன் திருவடிகளே சரணம்.



## 21. திருவிலட்சணைப்பிரகரணம்.

(அவதாரிகை.) பிரபன்னர்கள் சங்கு சக்கரங்களையும் சிலர் அவன் பஞ்சாயுதங்களையும் தரிக்க கடவர்கள் என்றும், அக்கினியில் தப்தமான சக்கிராங்கமில்லாதவர்கள் செய்யாநின்ற ஜெபதப அனுஷ்டானங்களும் சர்வதர்மங்களும் நிஷ்பலமாய்விடுமென்றுங் கூறுகின்றனர்.

(தந்தனந்தனதான)

346 வங்கமெனுங்கடலுலகில் அந்தணற்கு
வகுத்ததுயென்னவென மதிப்பீரே
பொங்காழிவலம்புரியும் இருபுயத்தில்
பொருந்தவணிபவர்களெனவுரைக்கும்
மங்காத பரமமெனும் வாழ்வுதனில்
மகிழ்ந்தனரென்றிப்படி மதியில்மிகுந்
திங்கர்குந்தெளிபிரம சூத்திரத்தி
ளிசைத்தமஹோபநிடமியம்புமென.

347 விருப்பமோடிருபுயத்தில் சங்காழி
விலட்சணைபெற்றினிய மகிழ்வுற்று
இருப்பர் பரமபௌத்ர ராகிநிதம்
இணையில் மாதவன்பதமுற்றிடுவார்
நெருப்பிலே தப்தமான சங்காழி
நேறிலாவிருபுயத்தணிந்திடெனக்
குறிப்பொடு ருக்குவேதம் பேமெனக்
கொண்டவட்டகந்தனிலரையுமென.

348 வேதனுக்குத் தந்தையாயும் பல்லுயிர்க்குள்
விளங்குமந்தரியாமி யாய்னின்ற
மாதவன்றன் சக்கரமும் சங்கிதனை
வாமம்வலத்தோளிரண்டினிதாக
சோதிபெருமனல்முகத்தில் தரித்தவர்கள்
சுகமாம்பரமபதமடைவரென
ஆதியென்ற யெசுர்வேத மதிவிதை
அறிவிக்குமென்றனறறிவுடையோர்

349 செய்தபெருந்தீவினையாற் பிறந்திருந்த
சீவனெல்லாந் தடமாருக்கமலக்கண்ணன்
மைதிகழும் மேனிதிரு மாலாழிசங்கு
மதிப்பொடு வளர்தோள் சேர்த்தவர்கள்
வுய்திரமாம்பரமபதம் அடைவரென
யுரைக்குஞ்சாமத்துத்தரவிருக்கி
லெய்துமொன்பதானவத்தி யாயமதில்
விசைக்குமென்றனரின்னமுங்கேளும்.

350 மற்றுமதர்வனவேதம் மாலாழி
வலம்புரி வாமமிடத்தோள் சேர்க்கில்
கொற்றமிகுமனுக்களெல்லாமொன்னலரின்றி
குவலயத்தையாண்டுகளிகூர்ந்தனரே
பொற்றடந்தேரிமையவர்கள் மேலான
பொன்னுலகையாண்டியவர் புகழ்பெற்றூர்
சிற்றிடையாளானவுமையால் பதியுமந்த
சீதரனருளால் காசிதனில் வாழ்ந்தார்.

351 விரவலர் சத்தியெல்லாம் வெற்றிகொண்டு
விளங்குஞ் சத்தியென்ற பெயருடைய
திருவளர் மார்புடையான் றன்னுடைய
திகரிசங்கிரண்டெனத்திகழ்கின்ற

பொருபடைதோள்புனைவார் தம்பாவ
புஞ்சமெல்லாந்துருசறுத்துமுத்திப்
ப்ரமானந்தமடைவார் யிதைமிகப்
பயில்பிரகதாரண்யயுபநிடதம்.

352 சங்கொடு சக்கரமிரண்டு தோளுச்சி
சாரங்கமானவில்லும் நெற்றிதனில்
துங்கமாந்தண்டாயுதமே யிதயமதிடற்
றுலங்குவாளிவையைத் தரிப்பவர்கள்
சங்கரபிர்மாதியரான தேவருக்கும்
தானரிதாகிய வப்பரமபதம்
அங்கவரெழிதிலடைந்து சுகிப்பரென
ஆக்கியபுராணமது யரையுமதே.

353 என்னுடைய சங்குசக்கரம் தரித்தவர்க
ளென்மேலன்பெய்துவரிருநிலத்தில்
நன்னியவரும் பொருள்போல் சிலசிலரென்
நாளுமவரிருந்த நகர்சூழ
மன்னியமூன்றுயோசனைகள் நற்றலத்தவர்
வடிவைக்கண்டால் பூதகணமெல்லாம்
அன்னிலையிலோடிடுமென யிதனையல்லா
தவரிட பாதகத்தின் வருத்தமெல்லாம்

354 பற்றறுத்து மறைப்படியே அசுவயாக
பலனுஞ்சுவர்க்கபல னடைந்து பின்னர்
வெற்றிபுனை நாரணனுர் பரமபதம்
மேவியிருப்பரெனத்தெளிவாக
யுற்றநீர் கடலுலகை ஆடையென
யுடையபூமியெனத் திகழ்கின்ற
பொற்றொடிக்கி நாரணனுர் புகன்றவற்றை
பூர்த்தியாகமாவராகபுராணஞ்சொலும்.

355 சுத்தமுறு பத்தினிகட்கு மங்கலமான
சூத்திரம்போலவே மாலடியவற்கு
வித்தகத்திகிரிசங்கு முத்திரைதனை
வெகுவிதயேற்றமெனக்கூருமஞ்சொலும்
மெத்தவுபவீதமவைப்போல் அந்தணற்கு
மேலானசங்காழி யியல்பெனவே
இத்தரையில் பாகவதற்கு விசேடமென
இயம்பிடும் வாயுவீயமாபுராணம்.

356 இருபுயத்தில் சங்குயாழி லட்சணைபெற்
றிருப்பர்தங்களையிகழ்வோரெல்லாம்
தரைமிசை பரவவகளும் விலங்கெனத்
தான்பலகால் பிறந்ததன் பின்னே
கிருமிகளாயசுத்த மதில்வந்து
கிடப்பரெனக்கிளர்த்தா ணிற்கும்
பெருமறையுட்பொருளை அநுசரித்த
பௌடீகமென்ற நூலறைசெய்யுமே.

357 ஓங்கு குருச க்ஷேத்திரத்தி லுவாகிரண
முற்றதிலுயர்ந்தோருக்குதவுகின்ற
பாங்குடைய மஹத்தான பலனதிலும்
பத்துமடங்காகுமென்றே பரிவாகத்
தேங்குபுரந்தரரியக்கர் சித்தர்முனி
தேவர்களுந்திகரிசங்கிரண்டதனை
தாங்குபுயத்தினராகி சதுர்விதசித்
தார்த்தியும்படைத்து தழைத்தோங்கினரே (தந்தன)

திருவிலட்சணப்பிரகரணம் சம்பூர்ணம்.
ஆகப்பிரகரணம் 21-க்கு கண்ணிகள் 1428.
தேசிகன் திருவடிகளே சரணம்.

———:o:———

## 22-வது சிற்ப்பிசாஸ்த்திரவிளக்கப்பிரகரணம்.

(அவதாரிகை) ஆலயம், தேர், அணிநகாம், சந்தை முதலாகியது களை ஆரம்பம் செய்யுங்கால் பிரதமத்தில் விஷ்ணுபிர திஷ்டை செய்யவேணுமென்பதாயும் சிற்பி சாஸ்த்திரவிதி யென்றுங்கூறுகின்றனர்.

(தந்தனந்தன.)

358 நேரிலாவாகமத்திலே நிரூபணமாய்
நிச்சியித்த சிவனது மகிமையெல்லாம்
ஆரறியமாட்டார்கள் அதனையிங்கு
அடைவுபெறயுரைக்கவேண்டுமோயிப்
பாரறியக்கலியுகத்து திஷ்டாந்தமாகப்
பரனடிபோற்றுமறுபத்துமூவர்
சிரியபதங்கள் பெற்றதும் அவரடைந்த
தெய்வீகமும் போதாதாதெளிவார்க்கு

359 அவ்வுரையைக்கொண்டுதானே சொன்னலது
ஆரணத்தின் பிரமானமதுவல்லவே
மைவளருகண்டத்தானுக் கிவைதன்னாலே
மகிமைவிரிக்கிறாய் வழிபடுவோர்
எவ்வகையாம்தேவர்தங்கள் பதங்களையும்
ஈவதற்கு சக்தியற்றிருப்பர்களோ
தெய்வீகமெச்சமையத்துக்கு மவரவர்
திஷ்டாந்தமாயுலகிற் சிறவாதுண்டோ

360 இங்கிவைகள் நிற்கவரியின் சமையத்துள்ள
ஈரைவருடனெழுநூற்றியெழுவர்
பொங்கிய தத்துவராதிய ரெல்லாருமாகப்
பூதலத்தில்முத்தியினைப்பொருந்தப்பெற்றார்
துங்கமுள சங்கரன்முத லானதேவர்
சொந்தமாயுதவுபதங்களுக்காதி

அங்கைநெடுமாலுதவும் பதங்களையு
மாயுங்காலந்தராந்தங்களுண்டு.

361 மேலவைகள் சொல்லவிரியும் ஆயினுமே
வெங்காளவிடமுண்டான் வெண்ணையுண்டான்
சீலமுறும்மகிமைதனை யுரைப்பதான
திகழ்வேதனூலினொடுசாஸ்த்திரம்விட்டு
பாவிருக்கனீரையருந்தும் மதனைப்போலப்
பார்வழக்கைப்பாராட்டிப்பகர்வதென்றால்
நீனுமுணர்வுடையோர்கள்மனதுக்கெல்லாம்
நிச்சியமாயுணர்ந்திடுமோ சொல்லீர்.

362 ஆயினும் நல்லதுநீவி ருரைப்பதெல்லா
மாரணத்தினியல்பெனவரியச்சொன்னீர்
மேயபொருள் காண்பதற்கு கண்ணுடியது
வேண்டுமோவிடையவன் புள்ளூர்வான்
கோயில்தோரும் பிரதமத்தின் தானமதில்
குளிர்சடையன் கோயலின் குடதிசையில்
மாயன் பரவாரதெய்வ மாகினனே
மற்றதினுற்றெறியாதோமகிமையென்றுர்

363 அன்னது திஷ்டாந்தமல்ல விதுகளெல்லா
மாகமத்தின்றுறையன்றியாரணமல்ல
தொன்னெறிவித்தாரமான சிற்பநூற்
றொகையுமுப்பத்திரண்டதனுள்ளே
சொன்னபலவாலயத்தில் பிரமதானந்
துலங்கத்திகரிகையுடையவனை
முன்னதாகப்பதிஷ்டைசெய்து மற்றவை
முறையிற்றிக்கினிற்றேவதைகளையெ.

364 உத்தமாமூர்ப்புரத்தும் பதிஷ்டைசெய்ய
யுரைக்குமதனையே நீங்களெல்லாம்

பத்திசெய்யுஞ்சிவாலயமோ அதுமட்டல்ல
பாவனமாகிய லிங்கப்பதிஷ்டைசொலும்
சித்தசஸ்ரீப்பெற்றமாலின் கெற்பக்கிரகச்
செய்கையது பஞ்சபேரம்தனிலே
வைத்தவந்தப்பிரமதானம்பெரும்போதுங்கள்
மகிமையுள்ள பேரமதில்வந்தபூசை.

365 ஏதமில்லா பிம்பமதனைக் கலந்து நிற்க
விசைத்தது சிற்பனூலெல்லவுமே
ஆதலினுற்றம் தமது ஆலயமன்றி
அணிநகர் நடுவுளோரதிகரன்றோ
தீதில் நாரணனுருமூன் றெவ்வொன்று
திகிழ்நாலுபேதங்களாமவைநால்
யோதியபோகமும் யோகம் சிருஷ்டியொடு
யொடுக்கமிவைகள் சிறந்திடுமென்னும்

366 சாத்தீக ராசதமும் தாமதமும்
தானேயம்முத்தொழில் சாறுமென்றார்
கீர்த்திபுனே திருமாற்குப் பதிஷ்டையிடங்
கிளாத்திடத்தவர் கெற்பக்கிரகந்தனே
ஏத்தும்பாகங்களேழெட் டெட்டுமெட்டு
எண்பத்தியொன்றீரெட்டுக்கிரெட்டென
சூத்திரமிட்டொருனலு விதங்களாகச்
சொல்லியிடுமாலயங்கள்தோறும்தோரும்.

367 நாலுவகையாதனமாம் மூலபேர
நாரணனைப்பிரமதானத்துச்செம்பொன்
கோலமலராளவனிக் கோதையொடும்
கூடிவிளங்கும்பதிஷ்டை கூடியேநிற்கும்
ஏனுமவர்சயனதான மானதொடு
யிருநாலுமூர்த்திக்கு மியல்பெனவே

சீலமிகு கௌவுஸ்துவங்கள் தனக்குமந்தத்
திசமுகத்தானைப்பிர திட்டைசெப்பும்.

368 ஈததுபிரமத்தானத் தியற்கைபினி
யெழில்பரிவாரத்தினியற்கையைகேள்
மாதுறைபாகன்சிற்ப வாக்கினிலே
மால்கோவில் மேவியபரிவாரம்
காதலுறுமிந்திரனும் நானுஞ்சேய்
கணபதியும் துவாரம் காப்போமென
யோதினரச்சிவனர் அதுபோல்
யொப்பிலாமாலிப்படியுரைத்ததுண்டோ.

369 அன்னதன்றிப்பிரமியத்தில் நான்கென
வாகியவத்தியாயமது தனிலே
மன்னியதாரகமான திருமாற்கு
மதிவளர்சடையானை மலரானைக்
கின்னரரைக்கிம்புருடரை தம்முடனே
கெருடகந்தர்ப்ப கேசரர்களொடு
பன்னகதும்புறுநார தாதியரைப்
பரிவாரகணமெனப்பகர்வாரே.

370 சக்கரக்கைநெடுமாலை யல்லாத்தேவர்
சகலர் தம்மாலயந் தனிலன்றி
மிக்கபெருஞ்செல்வமதனைக் கொடுத்திடார்
வேதாந்தப்பொருளெனவிண்டுமூர்த்தி
எக்கடவுளாலயத்துள் ளிருந்திடினு
மினியபெருஞ்செல்வ மீய்வரென
தக்கபராசரசிற்ப நாலுரைசெய்
தாரணியிலார்செல்வம்வேண்டாதார்.

371 பாவையொருபாகத்தானும் விங்கோற்
பவமூர்த்திசெய்வீரபத்திரதேவன்

மேவியதெக்கணமூர்த்தி கணபதியும்
வேலவனும்மற்ற விக்கிரகமெல்தாம்
காவிவிழிமலர்மானை யுரத்துவைத்த
கண்ணனுக்குப்பரிவாரகணமென்னும்
தாவுபராசர சிற்ப நூலுரைத்த
சாஸ்ததிரமன்றிதுவெனத்தள்ளலாமோ.

372 மானோபகரணத்தினால் காலபேதம்
வருத்துரைக்குமிடத்துமலரோனேர்
தானேறுமீசனையும் தந்தவன்
தாமோதரனென்னச் சாற்றுகைக்கு
மீனுயகேசவநாமம் பொருளை
விளங்கவியாசமுனி வியாக்கயான
தானேதும் சிற்பநூலா லுரைபபதுவெ
சங்கரர்க்கு ராரணன்றலைவனென்றே. (தந்தன)

சிற்பசாஸ்த்திரப்பிரகரணம் சம்பூர்ணம்.
ஆகப்பிரகரணம் 22-க்கு கண்ணிகள் 1448
தேசிகன் திருவடிகளே சரணம்.



## 23. பாடண்டகலியுகப்பிரகரணம்..

(அவதாரிகை) வேதவிதியைத்தவர்த்துச் செய்யானின்ற சகல தர்மங்களும் பாடண்டமார்க்கமெனவும், அது கலியுகத்துக்கு இயல்பென்றும் கூறுகின்றனர்.

தந்தனந்தனதான.

373 இன்னமுஞ்சொலக்கேளாய் மாதவனுக்
கிணையுமோரதிகதேவரையே
மன்னுபாடண்டிநினைக்கும் மெனப்பிரசா
பத்தியெனுஸ்மிருதியில் பகருவதே

அன்னவிண்டுவையுமவன்றன் அன்பரையு
மடைந்துநிந்திப்பவர்களவர்தானே
புன்நரகிலெய்துவரென்றே பாடண்ட
புலையர்களென்று வாமனமுரைக்கும்.

374 தேவரை மறையோரை வேதத்தின்
திரத்தையுநிந்தை சொலுமவர்களையே
தாவறுவேதவிருத்த மார்கத்
தலத்தெமைப்பூசை செய்திடுவாரும்
காவலன் திகிரிக்கண்ணனே யுலகத்தின்
காரணமானவனென்று செப்பும்
மேவியசத்தசலத்தின லென்றனையும்
விண்டுவிற்கதிகமென்றுரைப்பாரும்

375 நவையறுமிவ்வுலகிலே அநாசார
நானுபாடண்டிகளெனவோதும்
அவர் முகமுற்றதோஷம் மாதவனை
அணிகினேக்கிடி லறுமென்று
தவமிகுமுனிவருக்கு யுமாபதி
சத்தியமெனவுரைத்த வாசகத்தின்
பௌடிகபுராணத்துள்ளும் மன்னுமப்
பராசரசங்கிதையும்பகருமதே.

376 அனையபாடண்டரான பேர்களுக்கு
அவர்க்கிசை மோகனனூல்களுக்கு
இனிப்பகர் கலியுகத்தின் மேலவர்க்
கிடுவது சித்தியாதிருந்திடுமோ
முனிவர் சாபத்திலான மோகனனூல்
முற்றும் கலியுகத்தில் வளங்குமென
மனிதர்லோகத்தில்வரவே அதற்கு
வனகமென்ன வதன்செயலுரைப்பேனே.

## கலியுகவியல்பு.

377 அன்புமிகுமாந்தர்களே கலியுகத்
தடைவினைச் சொலக்கேட்டிடுவீரே
தும்பியைக்கார்த்தமாவின் ஆராதனந்
துகைபுவிதன்னிலே மிககுறைந்து
நம்பியேவேள்வித்திரம் அரங்களும்
நாளடைவதிலே மிகத்தேய்ந்து
இம்பரில்வரும்பொழுதே கலியனிட
யிபல்பெனக்கண்டு கொள்மிகநன்றாய்.

378 அகிலகாரணனை நாரணனிட
வாராதனைகுறைந்து பாடண்டர்
மிகுவராம் மாமறைகள் பயனிலலே
வேதியர்தமக்கென்றும் மேலான
மகிமையாம்தெய்வமொன்றுயுலகிலுண்டோ
மனிதருபாயமீதென்றுலகில்
புகழுவார் கலிகாலம் இதையெலாம்
புந்தியின்மாந்தர்கள் பொருந்தாரே.

379 படியையோரடியாலே கொண்டவன்
பத்தரானவர் தம்பக்கவிலே
கொடியவெங்கலியடரா யென்றுமே
கூறியசொல்வினைமுற்றவுமே
கடிகமழ்துளவணியும் விண்டுவின்
காட்சியானபுராணம் களரியதே
அடைவுசேரப்புராணம் பஞ்சகத்
தாதியத்தியாயமறைவதுகேள்.

380 நன்னுதல் விளியுடையா னடியரொடு
நானிலமாந்தரும் நாணுவாய்
மன்னுகாமப்பரவசத்தா லெங்கனும்
மயங்கியே ஞானவந்தகராகி

மின்னிய திகிரிச்செங்கண் நாரணன்
மெய்மையாம் பூசனை தனைவேண்டார்
அன்னியதேவரானோரைப் பற்றிமிக
வன்பிலாராதனம் செய்குவரே.

381 பாரினில் ஞானப்பண்பு குன்றுத
பரமபாகவதர் தனைக்கண்டும்
பேரறிவாளர்தானே ராயிருந்தும்
பீதகவாடையான் றன்பெருமை
சீருறவாக்கினிடமே செப்பியத்
திருவாராதனம் செய்யாரே
பூரியரவனைப்பரமாய் மனதினிற்
புலப்படார் புந்தியுந்தெறியாரே.

382 தோன்றியதுன் மதியதனுற் குறிப்பிலாத்
துராகிர்தப் பேர்சொலித்திரிவாரே
தேற்றமாம் மறைநெறியால் நடப்போர்
சிந்தையைத்திருப்புவார் சிலபேரே
போற்றியமறைக்குமிக விபரீதப்
பொருளுரைத்தரியின்மேலன்பினையே
மாற்றார் முன்னந்தீய ஜென்ம
வாசனைவாசிதராகிகிதம்.

383 பற்றியவன்நெறியைப்பற்றி அந்தவன்
பரம்பரையாய் சிலர்திரிவாரே
தெற்றெனவிரதத்துறையே எல்லாம்விட்டு
தேகமே சிலர் வளர்த்திடுவாரே
மற்றிவையே கலிகாலம் நிச்சயமாக
வயங்கிடுமியர்கைகளாமென்று
சொற்றரும்புவியிற்றெளிவாய் பரத்துவாச
சூரதசங்கிதையிதைத்தெறிவிக்கும்

384 பரிவுடனின்னமுமிந்த கலியனிட
பண்பினையுரைத்திடும்படிகேளாய்
தரைமிசையந்தக்கலியன் ஆதியிலே
தருமங்காலொரு முக்கூராக
வரவிடுமதர்மமுபாய் நிகழ்ந்தது
மகிதலத்தடைவிலே தேய்ந்திடுமே
மருவுந்தருமந்தானே காலது
மாய்ந்திடும்பாவமே மிகவளரும்

385 நிலமும் விளைவுகுன்றி கடையரும்
நீசருந்தலமையாய் னிற்பாரே
அலகிலாமருந்துகளும் பலித்திடா
தரசனுமறந்தவிர்த்தரும்பொருள்கொள்
புலமைசேர்மறையோரும் விதிமறந்து
புன்றொழிலேசிலர் புரிந்திடுவார்
வலிமைசொல் பாரிபதி பேணிலர்
மைந்தருந்தந்தையை மதியாரே.

386 தேவதைதன்னைக்குருவை மந்திரத்தை
சிந்தையில்மெய்யெனத் தெளியாரே
மேவியதெளிவுற்றாலும் வேதங்களின்
விருத்தனூலல்லாது விரும்பாரே
தாவில்வைதீகமுரினும் நாரணன்
தத்துவம்பரமெனவெண்ணாரே
பாவனைசெய்வாரவமும் பொருடனைப்
பரம்பொருளாகவே சிலர்பார்ப்பார்.

387 துலங்குஞன்மறையுருதி மெஞ்ஞானந்
தோன்றுதல் மார்தருக்கற்பமென
நலங்கிளருயர்ஞான முடையரன்றி
நாரணன் திருவாராதனையே

இலங்குமுக்கிரதேவதை களைப்பற்றி
யாவருங்தோத்தரித்திருப்பாரே
தலந்தனில் சாத்வீக குணமின்றி
தாமதகுணங்களே தழைத்திடுமே.

388 விஞ்சுபுண்ணியமதன்மேல் பாவிகள்
வீண்விபகாரததை மொழிந்திடுவார்
தஞ்சமான சாத்வீக சாஸ்த்திரம்
தன்னையோர்ந்தில மோகனமான
வஞ்சகத்துனூ கலொன்று பத்துநூறுய்
வளர்ந்திடுங்கலியன் முடிவினிலே
செஞ்சொலாரணமுழுதுந் தேய்ந்திடுஞ்
சீலமில்நூல்சிலசிறந்திடுமே.

389 ஓதிபவிதுகனெல்லாம் பதுமமென
யுயரும்புராணமுத்திரகாண்டம்
மேதகவாயுவீயம் மரீசிமுனி
விளம்பியனூலினும் விரித்திடுமே
நீதியில்லாக்கலிகாலம் தன்னில்மிக
நிகழ்த்திபநூலெலாம்மறைகளுக்கு
சாதனைகளான தல்ல யின்னமுஞ்
சாற்றுவேன் வெளிப்படத்தரைமீது.

390 மருவறுமாந்தரேகே ளீரைய்ந்து
மறிகடலேழினைத்தரித்தருளும்
தரையினிற் சத்தியமும் பொருமையுந்
தயைதருமங்களும்மாய்ந்திடுமே
கரவொடுமாயங்களும் குச்சேத்ர
காமமோகம்பசிகனலாகும்
திரமிகுந்தனங்குலமாம் வலியோர்
செய்கையேஞாயபாவிடமாகும்.

391 துங்கவேதியர் தமக்கு நியமம் விட்ட
சூத்திராசாரமே தொழிலாகும்
பொங்கியமேலோர்சபையும் பொய்யுடை
புண்மையேனிலையாகப் புரிவர்களே
தங்கியசன்யாசப்பெயர்கள் குடும்ப
தாரிகளாகவே சஞ்சரிப்பார்
மஙகையர் மாந்தருக்கு தஙகள்
மனப்பொருத்தங்களே மணமாகும்

392 திரமி தமாந்தருக்கு யின்னிலை
ஜீவனோபாயமாய் நின்றிடுமே
இருநிலந்தனிலவர்க்கு தீர்க்காயு
ளிருப்பது முப்பதாமாண்டளவே
அருவையர்மசப்பேற்றை யடைவது
ஆண்டிருனலென வறைவாரே
தருமதானங்கள்சிலதை நடத்துவது
தமைச்சிலர்புகழ்வதின்பொருட்டேதான்

393 மிடிந்த மன்னனைவிடுவார் சேவகர்
மெலிந்தசேவகனை மன்வேண்டானே
மடப்புறத்துறைவார்கள் வனத்துறை
மறைவரீனர்கீழ் வாழ்வாரே
படைப்புறுபசுமெலியக் கறப்பர்கள்
பாண்மருத்தாற் பசுப்பேறுரே
திடத்தசொல்வேதங்களும் பாடண்டத்
திரத்திறல் னிந்தனைசேர்ந்திடுமே.

394 மன்னர்கலியுக முடிவில் நெறிகெடும்
வனிதையரசுத்தமாய் வாழ்வாரே
மின்னுதன்மட்டுமழையே யுலகுக்கு
விளைவுகளெல்லாம் மிகக்குறையும்

பன்னியல் தானியங்க ளணுவைப்
பற்றவும் சிறியதாய் பரிணமிக்கும்
இன்னனவான கலியி னந்தத்தி
லெறிகடற்றுயிலுமெம்பெருமானுர் (தந்தன)

பாடண்டக்கலியுகப்பிரகரணம் சம்பூர்ணம்.
ஆகப்பிரகரணம் 23-க்கு கண்ணிகள் 1576.
தேசிகன் திருவடிகளே சரணம்.

## 24. கர்கியவதாரவைபவப்பிரகரணம்.

(அவதாரிகை.) கலியுகமுடிவில் ஸ்ரீமந்நாராயணன் சேதனுகோடி களை ரட்சிக்கும்பொருட்டு கலிக்காவதாரஞ்செய்து துஷ்டரைசசங்கரிப்பதாக கூறுகின்றனர்.

(தந்தனந்தனதான)

395 தலத்திடைகாண்பதற்கு வரிதான
தருமதாபனஞ்செயவெண்ணி
மலர்த்தடம்பொழில்சூழும் சம்பளநகர்
மறையவர் தங்களிடமதியுற்ற
குலத்திலேவிண்டு சன்மனுர் மகிழ்ந்திட
குவலயந்தனிலவதரித்தருளி
கலித்ததுரகவீர சிங்கார
கர்கியெனும் பெயர்படைத்துமிக

396 காத்தில்விஷயகர்களும் தரித்தவர்
காற்றெனக்கலினமாசெலித்தியிந்த
வரைத்தலங்காண்பதியும் அரணெங்கும்
மருவியகுரும்பெலா மருத்தெரிந்து
திருத்தியபின்னருலக மீடேறத்
தேய்ந்தொடிங்கியவறந்தழைத்திடவே
பெருத்தவிக்கலிதுரத்தும் மால்பெரும்
பெருமையை மறைகளே பேசிடுமே.

397 செப்பியவிதுகளெல்லாம் தெளிவாகச்
செகதலம்புகழ்ந்திட மனுநெறியா
விப்புவியாழ்பரிச்சித்து மன்னனுக்கு
இணையிலாச்சுகமுனி யருளியதோர்
ஒப்பிலாப்பாகவதம் இரண்டென
யுரைத்ததந்தமதிலிரண்டடுத்த
தப்பிலாவத்தியாயந் தன்னில்மிகத்
தழைத்தபிரமாணங்களறிவிக்கும் (தந்தன)

கர்கியவதாரப்பிரகாணம் சம்பூர்ணம்.
ஆகப்பிரமாணம் 24–க்கு கண்ணிகள் 1588
தேசிகன் திருவடிகளே சரணம்.



## சாற்றுமுறைச்சிந்து.

398 இன்னபடியாகவேத புராணமொடு
யிதகாசபலபிரமாணமாலும்
சொன்னநாரணன் பெருமை அனந்தமாய்த்
தொகுத்ததைச்சுருக்கினுமமையுமோதான்
அன்னதைசசைலதாசன் அல்பமாக
அடைவினுரைசெயுமிச் சிந்திதனை
கன்னலெமுமெனமதித்து எல்லாவற்றைக்
கைகொள்வீர்கற்றுணர்ந்தபெரியோரே.

399 மங்கைமன்கொல்லிகாவலனும்பல்லாண்டிசை
மாதவன்விஷ்ணு சித்தனுமதுரகவி
பொங்குபுகழ் பேயன்பூதன் பொய்கைவந்த
புண்ணியர்கள் பாணனெடுமழிசையர்கோன்
நங்கையருள்மாரன்தொண்டர்சூடிக்கொடுத்த
நாச்சியாரிவருலகுய்கவந்து
சங்கையற்றமறைப்பொருளே வெளிவாகத்
தமிழ்செய்துகந்தளித்தோர் வாழி வாழி

400 நாரணன் பல்லூழிகாலம் வாழிமறை
நண்ணுமங்கையுரத்தொருவாதுவாழி
பூரணமாயுள்ளபிர்ம ருத்திராதி
பொன்னுலகத்துள்ளபுரந்தரன் முதலோர்
காரணமாய் வாழியென்றே கடலுலகில்
கற்றுணர்ந்தபேருமிச்சிந் திதனை மெய்
பாரணஞ்செய்குவோரெல்லாம் வீடுவிட
பதம்பெற்றுய்க்குவர்பல்லாண்டுவாழி.

தந்தனந்தன தாலதந்தனா
தந்தனந்தன தலதனதன தானா.

## வாழித்திரு விருத்தம்.

---

23 சீர்வளரும் பொருளாட்சித் திருநகரில் வைசியகுலச் செல்வனுண
பேர்வளரும் இராமலிங்கப் பிரபலவான் வெகுகாலம் பிரியத்தோடு
பார்வளர நடத்திய கோபாலவிலா செனுமச்சுப் பதிப்புசாலை
ஏர்வளரு நிலைநாட்டு விசிட்டாத்துவிதச்சிந்தென்றென்றும் வாழி

24 கலியுகத்திந்தியாவை காத்திடக்கமலக்கண்ணன்
பொலிவுரு மடைந்ததேபோடும் புவியிடைப் போந்தானென்ன
மலிவுறு குணத்தால்மிக்க மன்னனும் ஜார்ஜுவேந்தும்
நலமுறு மேரிராணி நங்கைபல்லாண்டு வாழி.

25 பரனடியார்கள் வாழப் பல்திருப் பதியும் வாழத்
திரமிகு மாழ்வார் வாழச் செய்யநற் கலையும் வாழ
அருமறைப் புராணம் வாழ அந்தணர் பலரும் வாழ
இருவிசிஸ் டாத்துவைத மிசைப்பவர் வாழி வாழி

---

| | |
|---|---|
| ஆக கண்ணிகள் | 1600 |
| சிறப்புப்பாயிரச்செய்யுள் | 22 |
| விஞ்ஞாபனவசனம் | 1 |
| கடவுள்வாழ்த்துப்பிரசரணம் செய்யுள் | 22 |
| வாழித்திரு விருத்தம் | 3 |
| ஆக மொத்தம் | 1648 |

விசிஸ்டாத்வைத பரத்வ நிர்ணயச்சிந்து சம்பூரணம்.

ஸ்ரீமத் வேதாந்ததேசிகர் திவ்ய திருவடிகளே சரணம்.



